உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநசம்பந்தகுருப்யோநம:

# சித்தாந்தரத்நாகரம்.

## சுக்லாம்பரதர சுலோக விசாரம்.

இஃது

"வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதம்"

ஸ்ரீ ல ஸ்ரீ

சோமசுந்தர நாயகர் அவர்களால்

இயற்றப்பட்டு

ஷையார் மாணவகர்

ஸ்ரீமாந்-பல்லவபுரம்

அப்பாவு செட்டியார் அவர்களால்

பரிசோதித்து

தமது

சென்னை

வித்யாபாஸ்கர அச்சியந்திர சாலையிற் பதித்து

வெளியிடப்பட்டது.

*31* **January** *1906.*

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ சம்பந்ததீர்த்தசரணம்யாம:.



# சித்தாந்தரத்நாகரம்.



## முகவுரை.



சித்தாந்தம் என்பது முடிபு என்று பொருள்படும். முடிபு எனவே, தனக்குமேலொரு கொள்கையு மில்லாதது என்று பெறப்படும். இம்முடிபு எங்கே பெறப்பட்டதெனின், சிவாகமத்திற் காண்க. இதனால் சிவாகமத்திற் பெறப்பட்ட முடிபே முடிபெனவும், அதுவே சித்தாந்த மெனவும், அதற்குமேலிட்டதொரு சித்தாந்த மின்றெனவும் வெளிப்பட்டது. இந்தவுணர்ச்சியால், சித்தாந்தம் என்பது ஆகமமுடிபு என்று நிச்சயிக்கப்பட்டது. ஆகமாந்த மெனினும், சித்தாந்த மெனினும் ஒக்கும். ஆகமாந்தமாகிய சித்தாந்தமே சைவமெனவும் படும். எனவே, சைவத்தின் மேலிட்ட தொரு சமயமு மின்றென்பது நாட்டப்பட்டது. "சைவசமயமே சமயம் சமயாதீதப் பழம்பொருளை" என்றுகூறிய தாயுமானசுவாமிகள் தெய்வத் திருவாக்கானுங் காண்க. "சமயாதீதப் பழம்பொருள்" என்றதனால், சைவசமயத்தினும் அதிகரித்த வேதாந்த ஞானமென்று சிலர் கூறுவர். அது, "யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவரும்" என்று கூறிய வாக்கியத்தால் மறுக்கப்படுதலின், அங்ஙனங்கொள்வது குற்றமாம். மற்றெவ்வாறு கருதப்படு மெனின், அதீத சமயமென வெளிப்பட்டு முன்னர்க்கூறிய சைவத்தையே வலியுறுத்துமென்க. "அயர்வறச் சென்னியில் வைத்து ராஜாங்கத்தி லமர்ந்தது வைதிகசைவமழகிதந்தோ" எனவும், "சந்தான கற்பகம்போலருளைக் காட்டத் தக்கநெறி யிந்நெறியே தான் சந்மார்க்கம்" எனவும் போந்த வாக்கிய விசிட்டத்தானுங் காண்க. இதனால், "சமயாதீதப் பழம்பொருள்" என்றது அதீதமாகிய அச்சைவத்

தாற் பெறப்பட்ட வுண்மைப்பொருள் என்று நாட்டப்பட்டது. ஆக மாந்தம், சைவம் என்னும் பரியாய நாமங்களையுடைய மார்க்க மொன்றே சித்தாந்தமாயின், இச் சித்தாந்தத்தின் கீழ்ப்போந்த பூர் வபட்சங்கள் யாவை? அவற்றிற்குரிய பிரமாணங்கள் யாவை? எ னின்; உலகாயதம், புத்தம், சமணம், பாட்டம், பிரபாகரம், கிரீடா ப்பிரமவாதம், சத்தப்பிரமவாதம், மாயாவாதம், பாஞ்சராத்திர முத லியன பூர்வபட்சங்களும், வேதமுதலியன பிரமாணங்களுமாம். வேதம் சப்பிரமாணமும், சுவதப்பிரமாணமுமாக, அதிற்பெறப்பட் ட மார்க்கங்கள் பூர்வபட்சமாத லெங்ஙன மெனின், விளக்குதும். வேதம் பொருள் பலபடத்தோன்றுஞ் சூத்திர ரூபமா யிருப்பதொ ன்று. பலபொருள் கொண்டியங்கலால் ஒன்றிலொன்று முரணியசித் தாந்தம் யாவும் அவ்வேதத்தி னுண்மைப்பொருளாத லிழுக்காம். பல பொருள்களில் ஒன்றே அவ்வேதத்தினுண்மையாதல் திண்ணம். இதனால், வேதம் சப்பிரமாண மாதலும், அதிற் பெறப்பட்ட மாத் திரத்தானே யெல்லாமார்க்கங்களும் சித்தாந்த மாகாமையும் வெளி ப்பட்டது. யாவும் பூர்வபட்சமேயாகி ஒரு பொருளே அந்தவேதத் தின் சித்தாந்தமு மாதல் துணியப்பட்டது. பூர்வ பட்சங்களாய்ப் போந்தமார்க்கங்கள் பலவும், சித்தாந்தப்பட்ட மார்க்கமொன்றும் அவ்வேதத்திற் பெறப்படுங்கால், அச்சித்தாந்தம் இதுவே யென வொன்றைச்சுட்டுவது கஷ்டதரம். ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் கொள்கையே அச்சித்தாந்தமென்று கூறுகையால்.

வேதத்திற் பெறப்பட்ட மார்க்கங்களுள் சைவமும் ஒன்றேயா க, அதற்கு மித்தோடம் வருமே யெனின், தத்தோஷத்தைப் பரிக ரிப்பாம். வேதம் சிவபெருமானால் சொல்லப்பட்டது. உலகாயதன் முதலிய சமயிகள் அவ்வேதத்தைத் தங்கள் கன்மம் வழிவிட்டபடி யே யுணர்ந்து பொருள் கூறித்தியங்கினர். வேதத்தைச் சொன்ன வர் பதிப்பொருளாயுள்ளவர். அவர் இயற்கையே பாசமில்லாதவர். அவர் திருவாக்கை யுணரப்போந்தவர்கள் பாசபத்தாளாயுள்ள பசு க்கள். பசுக்களெனவே, கன்மத்தாற் பிணிக்கப்பட்டுச் சங்மபந்தத் தைப் பெற்றியங்கு மவரென்பது வெளிப்பட்டது. இன்னலட்சண யுக்தாளாயுள்ள பசுக்கள் தாங்கள் தாங்களே பதிவாக்கை யுணரத் தொடங்குங்கால் கன்ம வேறுபாட்டால் பல்வேறு வகைப்பட்ட தீ மையிற்செறிந் தழுங்குவரன்றித் தமக்குத் தாமேயுண்மையை அறி வரென்பது அசங்கதம். ஒவ்வொருவரும் வேதத்திலுள்ள வாக்கிய

ங்களைத் தத்தங் கன்மத்துக் கீடாகப் பொருள்கொண்டு எம்மசித்தாந்தம் வேதத்திற் பெறப்படலால் யாமே வேதாந்தி! யாமே வேதாந்தி!! என்று இறுமாந்து கூறுவதொன்றே யொழியவேதத்தி னுண்மைப் பொருளிதுதானென வொன்றைச் சுட்டியறிந்து நிச்சயிக்கும் வரையில் வேறு ஒருபயனுமெய்தாரென்க.

இவர்களுள், ஆன்மாவே பொருளென மயங்கும் ஏகான்மவாதி யொருவனே மற்றைச் சமயிகளை நோக்கத் தானே முழுவேதாந்தி யென்று வெளிப்பட்டிருக்கின்றனன். இவன் வேதாந்தியாதல் சாலுமோ எனின், இவனோ பாசபத்தனுயுள்ள வோர் பசு. நினைப்பு மறப்புகளாகிய சகலகேவலங்களிற் றடுமாறி யுழல்கின்றவன். இவன் வேதத்தை யுணர்ந்தபோது இவனுணர்ந்தபொருளே யுண்மை யென்பதற்கு யாது பிரமாணம்? இப்படியே மற்றைச்சமயப் படுகுழிகளில் வீழ்ந்து தடுமாறும் பசுக்களும், அவரவர்கள் வேதத்தை யுணர்கையில் அவற்றைத் தனித்தனி யுண்மையென்று அங்கீகரித்த பிரமாணங்கள் யாவை? தாங்கள் தாங்களுங் கூறும்பொருள்கள் நின்மலமாயுள்ள வேறு பிரமாணத்தால் அங்கீகரிக்கப்பட்டா லொழிய உண்மையாதலிழுக்காம். நின்மலமாயுள்ள வேறுபிரமாணமெனவே, நின்மலன் சிவனேயாதலால் அந்தப்பிரமாணமும் அப்பதிவாக்கே யாதலமையும். பதிவாக்காகிய வேதத்துக்குப் பசுக்கள் கூறும் பொருள்கள் அப்பதிவாக்கானே யங்கீகரிக்கப்படவேண்டுமென்பது நாட்டப்பட்டது. பதிவாக்கைப் பசுக்களொருபோதுந் தாமேயறியாராகையால் பசுக்கள் அதை அறிந்தா ரென்பதும், அறிவாரென்பதுஞ் சர்வாபத்தமாம். "அறிவித்தாலன்றி யறியாவுளங்கள்" என்னும் பிரமாணத்தால் வேதத்தின் பொருளும் அவனறிவித்தாலன்றி அறிவாரொருவருமிலர். வேதத்துக்குரியபொருள் இதுவே! இதுவே!! என்று பாஷ்யங்கள்செய்து வெளிப்படுத்திய சமயிகள் தாங்கள் தாங்களுங் கூறுஞ் சித்தாந்தங்களை நாட்டுவதற்கு உதகரித்துக் காட்டிய பிரமாணங்கள் பதிவாக்குக ளல்லாமையால், அவரவர் சித்தாந்தங்களோடு அவர்கள் காட்டப்போந்த பிரமாணங்களு மவலப்பட்டழியும். பிருகஸ்பதி, கபிலர், அக்ஷபாதர், சைமினி, வியாசர், விஷ்ணுமுதலியவர்கள் செய்த நூல்களே வேதார்த்தங்களாக வெவ்வொரு சமயிகளுங்கொண்டு வெளிப்பட்டனர். பிருகஸ்பதி முதலாயினோரும் பாசபத்தாளாதல் திண்ணமாக, பசுக்களாகிய வன்னோர் வாக்குகள் பதிவாக்குக்குப் பொருளாவதெப்படி? ஒருக்காலும் பொருள்களா

காவாம். பிருகஸ்பதி முதலாயினோர் சிவானுக்கிரகம்பெற்ற மேலோர்களாக, அவர்கள் வாக்குகள் ஏன் பிரமாணமாகா வெனின், அதிகாராநு குணமாய்ப் பிரமாணமாதல்பெறும். எனவே, ஒன்றிலொன்றேற்றமுடைய சாதகசாத்தியப் பிரமாணங்களாம். ஒன்றிலொன்று முரணிய சித்தாந்தங்களை அவர்கள் ஏன் கூறினரெனின், ஆன்மாக்களுடைய கன்மவேறுபாடு நோக்கியாம்.

எங்ஙனமெனின், தேகேந்திரியப் பிராணாந்தக் கரணதர்மமான விசாரத்தில், நிர்விசாரகிரஸ்தனை வொருவனைப்பார்த்துத்தேகமே பொருளென்று சாதித்தும், தேகவிசாரங் கழிந்தபின்னர் அதனுண்மை அவனுக்குப் புலப்பட்டவழி அதற்குமேலிட்ட பொருளை யுணர்த்துவான் றொடங்கி முன்னையதைப் பூர்வபட்சமாக்கி இது வல்லபொருள் இந்திரியமே பொருளென்று சாதித்தும், இந்திரிய விசாரங்கழிந்த பின்னர் அதனுண்மை அவனுக்குப் புலப்பட்டவழி, அதற்குமேலிட்ட பொருளை யுணர்த்துவான் றொடங்கி முன்னையதைப் பூர்வபட்சமாக்கி இதுவல்ல பொருள் பிராணனே பொருளென்று சாதித்தும், பிராணவிசாரங் கழிந்த பின்னர் அதனுண்மை அவனுக்குப் புலப்பட்டவழி, அதற்குமேலிட்டபொருளை யுணர்த்துவான் றொடங்கி முன்னையதைப் பூர்வபட்சமாக்கி இதுவல்லபொருள் கரணமே பொருளென்று சாதித்தும், கரணவிசாரங் கழிந்த பின்னர் அதனுண்மை அவனுக்குப் புலப்பட்டவழி, அதற்குமேலிட்ட பொருளையுணர்த்துவான் றொடங்கி முன்னையதைப் பூர்வபட்சமாக்கி இதுவல்ல பொருள் ஆன்மாவே பொருளென்று சாதித்தும், ஆன்ம விசாரங் கழிந்தபின்னர் அதனுண்மை அவனுக்குப் புலப்பட்டவழி, அதற்கு மேலிட்டபொருளை யுணர்த்துவான் றொடங்கி முன்னையதைப் பூர்வபட்சமாக்கி இதுவல்ல பொருள் இந்திரனே பொருளென்று சாதித்தும், இவனல்ல சந்திரனேயெனவும், இவனல்ல பிரமனே யெனவும், இவனல்ல விட்டுணுவே யெனவும் முறையே யாவரையும் பொருள்களெனச் சாதித்தும் உணர்த்துவது முறையாதல் இழுக்கடையாமை காண்க. குழந்தைக்குப் பாலூட்டும் பருவத்திற் பாலூட்டியும், சோறூட்டும் பருவத்திற் சோறூட்டியும் வளர்த்தல் உபகாரமாதல் கண்டுதெளிக.

இந்த விசாரத்தால் ஆன்மாக்களுடைய கன்மத்துக் கீடான வுணர்ச்சியைப் பயப்பனவாகிய சித்தாந்தங்களைப் பிருகஸ்பதி முதலாயினோர் பிரகாசப்படுத்திய தந்திரம் வெளிப்பட்டது. பிருகஸ்

பதி முதலாயினோர் செய்த சித்தாந்தங்கள் வேதத்திற் பெறப்பட்ட பொருள்களேனும், அவை யுண்மைப் பொருளாகாமையால் வேதத்துக்குப் பாஹியசித்தாந்தங்களேயாயின. அச்சித்தாந்தங்களை வேதமே பலவிடங்களில் நிஷேதித்துக் கூறுகையால், அவற்றை முன்னரங்கீகரித்தது சாமாநியாதிகாரிகளுக்கு அநுக்கிரஹமாகவும், பின்னர் திரஸ்கரித்தது உத்தமாதிகாரிகளுக்கு அநுக்கிரஹ மாகவுமென்பது தெளிக. வேதத்திற் பெறப்பட்ட மாத்திரத்தானே யமையாது வேதத்தால் நிந்திக்கப்படாமையும் பெற்றமையு மார்க்கமொன்றே அவ்வேதத்தின் றுணிபொருளாதல் நிச்சயிக்கப்பட்டமையால், அவ்வுத்தம மார்க்கம் சைவமார்க்கமென்பது சொல்லாமே யமையும். சைவமொன்றையே பிரதிபாதிக்குஞ் சிவாகமங்களுக்கும் அவ்வேதத்தைச் சொல்லியருளிய சிவபெருமானே வக்தாவாகையால்.

வேத சிவாகமங்க ளிரண்டும் பதிவாக்குகளாகையால் ஒன்றிலொன்று முரணுமை வெளிப்பட்டது. கன்மவேறு பாட்டையுடைய வுயிர்கள்பொருட்டுப் பொருள்பலபட வேதத்தைக்கூறிய சிவபெருமான் அவ்வேதத்திற் பெறப்படும் பொருள்களில் தம்முடைய முடிபொருளு மொன்றே யாதனுேக்கி, அது எதுவென மயங்காதவழி அப்பெருமை தோன்ற வேதத்துக்குச் சிவாகமங்களைப் பாஷிய மெனச்செய்தனர். ஆகவே, வேதம் சூத்திரமும், சிவாகமம் பாடியமு மெனக்கொள்ளப்பட்டன. சிவவாக்காகிய வேதத்துக்கு உலகாயதம், மாயாவாதம், பாஞ்சராத்திர முதலியன பாடியங்களாய்ப் பிருகஸ்பதி முதலாயினோரால் செய்யப்பட்டமை கொண்டே அவை வேதத்தினுண்மைப் பொருள்களாகாவாம். வேதத்தைச்செய்த சிவபெருமான் அதற்குப் பாடியம் தாமே செய்திருத்தலால். மூலக்காரரே யுரையுஞ் செய்துள்ளாராக, அவ்வுண்மையுரையைக் கைவிட்டு வேற்றுரைகளின் மொத்துண்டலைவதெற்றுக்கு? அவ்வேற்றுரைகள் பதிவாக்குக ளல்லாமையால். பிற பசுக்களுரையை நாம்பற்றுவதைக் காட்டிலும் பசுக்களாகிய நாமே நமக்கு விளங்கியவழியேன் பொருள் கொள்ளக்கூடாது? பசுக்களுக்குப்பசுக்களா வுண்மை யுணர்த்தற்பாலர்? குருடனுக்குக் குருடனு கோல் கொடுப்பவன்? ஆகவே, பசுமார்க்கங்களாகிய இக்குருட்டு ஞானங்களில், பதிமார்க்கமாகிய சிவஞானமுமொன்ருதல் நிகழாமைகண்டு தெளிக. உலகாயதமுதலிய ஞானங்கள் பதிவாக்கிற் பெறப்பட்டமை

யால் அவ்வாக்குக் கிழுக்குண்டா மெனின், இல்லாமையை விரிப்பாம். கண்ணுடியின் முற்பட்டபொருள்களை அவைதன்னிட முள்ளனபோல் அது காட்டியதுகொண்டே அப்பொருள்களை அக்கண்ணுடியிற் ருதான்மியப் பொருள்களெனக் கொள்பவர் யாவர்? கண்ணுடிக்கு அதனொளியே தாதான்மியமாதலமையும். அதிற்காணப்பட்ட பொருள்கள் அதிலில்லாத பொருள்களாதல்போல் வேதத்திற்பெறப்பட்ட பொருள்கள் அவ்வேதமாகிய கண்ணுடியி லில்பொருள்களேயாம். கண்ணுடிக்கு ஒளியே யுள்பொருளாதல்போல் வேதத்துக்குச் சிவாகமமே யுள்பொருளாகிய தாதான்மிய சம்பந்தமுடைத்தென்க. எதிர்ப்பட்ட பொருள்களைத் தன்னிடங் காட்டியதுகொண்டு கண்ணுடிக்கொருதாழ்வு மில்லாததுபோல் பலசித்தாந்தங்கள் பதிவாக்கிற் பட்டமைகொண்டு அவ்வாக்குக் கொரு தாழ்வு மின்றென்க.

வேதாந்த சூத்திரத்துக்குப் பாடியஞ்செய்தருளிய ஸ்ரீகண்டாசாரிய சுவாமிகள் "வயந்துவேதசிவாகமயோர்ப்பேதம்- நபஸ்யாமः வேதோபிசிவாகமः" என்னும் வாக்கியத்தால் வேதசிவாகமங்கட்குப்பேதங் காண்கின்றிலம். வேதமே சிவாகமம் என்று அவற்றின் அபேதத்தை விளக்கியிருத்தல் காண்க. ஸ்ரீ பாஷ்யத்தில் வேதசிவாகமங்கட்குப் பேதமின்மை பிரசங்கிக்கப் பட்டிருத்தலின், வேதாவிருத்தமாகிய சிவாகம பாஹ்ய சித்தாந்திகளாகிய மற்றைப் பாஷ்ய கர்த்தர்கள் வேதபாஹ்யரேயாயினர். சைவபாஷ்யகர்த்தா வொருவரேயன்றி மற்றைப் பாஷ்யகாரர்கள் கன்மவேறுபாட்டையுடைய பசுக்கள் கூறிய நூல்களை யெல்லாம் பிரமாணமாகக் கொண்டமையால். ஸ்ரீ கண்டாசாரியர் தமதுபாஷியத்தில் வேதசிவாகமங்களேயன்றி வேறுநூல்களையுந் தழுவியதுண்டேயெனின், "அன்னியநூலின் விதியவிரோதமே, லுன்னேல்பழுதென்றுளத்து" என்னும் நியாயம் வெளிப்படலால் அவரங்ஙனந் தழுவியது தோடமன்றென்க. இந்த விசாரத்தால் சைவபாஷ்ய மொன்றே வியாசருண்மைக் கருத்தினதெனவும், மற்றைப்பாஷ்யங்கள் அவ்வவற்றைச்செய்தவர் கன்மவயத்தின வெனவும், முன்னையது சத்திநிபாதர்க் குரித்தெனவும், பின்னவை சாமாநியர்க் குரித்தெனவும் நிச்சயிக்கப்பட்டது. சைவபாஷ்ய கர்த்தாவாகிய ஸ்ரீ கண்டமூர்த்திகள் சிவபெருமானுடைய ஸ்ரீ கண்டத்தின் அமிசம்பெற்று அவதரித்த வுண்மை நோக்கியே அவர்க்கு அத்திவ்யத்திருநாமம் வந்தமைகாண்க. இவ்வுண்மையை ஸ்ரீக

ண்டவிஜயத்தினும், பவிஷ்யோத்தரத்தினுங்காண்க. இவ்வாசாரியர் கூற்று சர்வசம்பிரதி பன்னமென்பதை விளக்குவான் உலகன்னை யாகிய ஔவை யென்பவர் அருளிச்செய்த உண்மைவாக்கியம் வருமாறு. "தேவர்குறளுந் திருநான்மறைமுடிவு, மூவர்தமிழு முனிமொழியுங், கோவை, திருவாசகமுந் திருமூலர்சொல்லு, மொருவாசகமென்றுணர்" என்னுந் திருவெண்பாவில் திருக்குறள், உபநிடதங்கள், தேவாரம், திருக்கோவையார், திருவாசகம், திருமந்திர முதலியசித்தாந்த நூல்களோடு வியாசசூத்திரமும் ஒன்றெனச் சேர்க்கப்பட்டிருத்தலின் முனிமொழியெனப் போந்தவச்சாரீரக சூத்திரம் சித்தாந்த பிரதிபாதிதமென்பது சொல்லாமே யமையும். ஆகவே, சைவபாஷ்யமொன்றே அதற்குரித்தென்பது நாட்டப்பட்டது. இன்னும் "வேதமொடாகம மெய்யாமிறைவனூ, லோதும் பொதுவுஞ் சிறப்பு மென்றுன்னுக, நாதனுரையிவைநாடி லிரண்டந்தம், பேதம தென்னிற் பெரியோர்க்கபேதமே" என்று திருமூலதேவர் திருமந்திரத்திற் கட்டளையிட்டுள்ள வாக்கியமுஞ் சான்றென்க. மேல்விசாரத்தால் வேதமே சிவாகமம், சிவாகமமே வேதம் என்னு முண்மை வெளிப்படலால் சிவாகம மொன்றேயன்றி வேறு வியாக்கியானங்களை வேதத்துக் குரிமையெனக் கோடல் அசங்கதமென்க.

வேதமுஞ் சிவாகமமு மொரு சித்தாந்தத்தை விளக்கவந்த மூலமும் உரையுமாக, ஆகமத்தைநோக்க வேதத்தைப் பூர்வபட்சமென்ற தென்னையெனின், சநகர்முதலிய முநீந்திரர்நால்வரும் வேதங்களையும் உபநிடதங்களையும்நெடுநாள்வரையும் ஓதி ஞானம் நிலைபெறாதவ ராயினரெனவும், பின்பு ஆகமாந்தமென்னும்பெயரையுடைய சித்தாந்தத்தை யோதி ஞானம் நிலைபெற்றன ரெனவும் சங்கரசங்கிதையிற் கூறியவாற்றால், வேதத்தினும் சிவாகமத்திற்குப் பிராமாண்யம் வெளிப்பட்டது. வேதம் தன்னை ஆச்சிரயிக்கும் எல்லாச் சித்தாந்தங்களும் தன்னிடத்தி லுள்ளனவாகவே காட்டுந்தன்மையுண்மையால். அப்படிக்காட்டுங்கால், காணப்படு மொவ்வொன்றினும் பிரமாணபுத்தி பண்ண வருந்தோஷ மேற்கொண்டியங்கல் திண்ணம். ஆகவே, மயக்கவறிவை விளைப்பதொன்றாக நிச்சயிக்கப்பட்டது. அது சாமாநியராகிய உலகர்க்கே சிவனால்கொடுக்கப்பட்டதென்னு முண்மையால். இந்தவிசாரத்தால் அது சத்திநிபாதர்க்கு உபயுக்தமாகாதென்க. இந்த நியாயம்பற்றியே ஆகமத்தைநோக்க அது பூர்வபட்ச மாயிற்று. வேதத்தினந்தம் வேதாந்தம் ஆவதுபோல் ஆகமத்தினந்தம் ஆகமாந்தம் என்பது அமையும். அப்படிக்குக்கூறு

து சித்தாந்தம் என்று வழங்குமாற்ருல், ஆகமாந்தமே சித்தாந்தமெ ன்னும் பரியாயநாமத்தைப் பெற்றமை வெளிப்பட்டது. இதனுல், ஆகமாந்தத்துக்குப் பரியாய நாமம் வந்ததுபோல் வேதாந்தத்துக் கும் பரியாயநாமம் வந்திருத்தலை நோக்கின், அது பூர்வபட்சம் என் னும் பெயர்த்தாம். ஆகவே, வேதாந்தம் பூர்வபட்சமும், ஆகமாந் தம் சித்தாந்தமுமாதல் வெளிப்பட்டது. "ஒரும்வேதாந்தமென் றுச்சி யிற்பழுத்த, வாராவின்ப வருங்கனிபிழிந்து, சாரங்கொண்ட சைவசித்தாந் தத், தேனமுதருந்தினர்சிலரே" என்னும் வாக்கியத்தானும் பூர்வபட்ச சித்தாந்தங்களாகிய வேதாந்த ஆகமாந்தங்களி னுண்மை பெறப்பட் டது. இச்சித்தாந்தமாகிய ரத்னங்களுண்டாகும் சமுத்திரம்போல் வதொன்ருக விந்நூல்கள் வெளிப்படு மாற்ருல், பிறமுடிபுகளைக் கீழ்ப்படுத்திச் சைமொன்றினையே நாட்டவெழுந்த விதற்குச் சித் தாந்தரத்நாகரம் என்னும் பெயர் சூட்டப்பட்டது.—இன்னும் வி ரிக்கிற்பெருகும்.

மெய்கண்ட தேசிகன் றிருவடிவாழ்க.

———:o:———



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்தகுருப்யோநம:

# சுக்லாம்பரதர சுலோக விசாரம்.



## கணபதிஸ்தோத்ர சுலோகம்.

"சுக்லாம் பரதரம் விஷ்ணும்
சசிவர்ணம் சதுர்ப் புஜம்
பிரசன்ன வதனம் தியாயேத்
சர்வ விக்நோப சாந்தயே."

இந்தச் சுலோகம் விநாயகர் பரமானதென்பது சர்வஜன சம்மதமாகும். ஆயினும் இதிலுள்ள "விஷ்ணும்" என்னும்ஏகதேசபதத்தை யாதரவாகக் கொண்டு வீண்வழக்காளிகளாகிய வைணவரிற் சில்லோர் அதை விஷ்ணுபரமாக வலிந்தீர்த்துப் பொருள் செய்து சாதிக்க முயல்கின்றனர். அது அபார்த்தம் என்பதை அடியில் வரும் சைவ வைணவ வாதிகளின் விவாதவாயிலால் தெள்ளிதின் விளக்கிக் காட்டும் விஷயம் வருமாறு:—

"ஏழைக்குடி" என்பாரொருவர் 1898-ஷு ஆகஸ்டுமீ 3உ கூடலூர் தேசாபிமானி பத்திரிகையில் "சுக்லாம் பரதரம்"என்னும் சுலோகத்துக்குப் பொருள் விரித்து, அதுவிநாயகர் பரமானதென்றும், விஷ்ணு பரமாகாதென்றும் தமக்குத் தெரிந்த நியாயங்களைக்கூறிச் சாதித்தார். அதிலசூயைகொண்ட "இராமதாசர்" என்னுமொருவர் ஷை பத்திரிகையிற்றானே மறுப்பெழுதிப் பரப்பினார். இருவரது யோக்யதையையும் யாம் பகுத்துணருங்கால் ஏழைக்குடியார் விஷ்ணுபரமாகாது என்றாரேதவிர விஷ்ணு தூஷணமொன்றுஞ் செய்தாரில்லை. இராமதாசர், ஏழைக்குடி தூஷணம், கணபதி தூஷணம், சிவதூஷணம், அப்பையதீக்ஷிதர் தூஷணம் முதலிய சைவதூஷணங்களையே நிரப்பினார். இனியாம் இராமதாசரது விபரீதவிவாதத்தை மறுத்துபகரிப்பாம்.

அந்தச்சுலோகத்தில் "விஷ்ணும்" என்பதற்கு வியாபகர் என்று வாதிகளிருவரும் ஒப்பினார்கள். இது யோகார்த்தம். இப்படியொப்பியதனால் இராமதாசருக்கு ஒரு லாபமுந்தேறியதில்லை. கணபதி பரமாக அது எம்மட்டிற் சிறக்குமோ அதற்கதிகமாக விஷ்ணுபரஞ் சிறக்கஅதற்கு யோக்கியதையின்று. விஷ்ணுபரஞ் சிறக்கவேண்டுமானால், விஷ்ணுவென்னும் பெயருடையவர் என்று தமது தெய்வத்தை இராமதாசர் பூஷிக்க வேண்டும். இதுரூடிப்பொருள். இவ்வளவு கண்டெழுத வறியாத பூர்வபட்சியார் ஏழைக்குடியை ஏமாற்றுங் குடியாய்ப் புறப்பட்டது விந்தையேயாம். விஷ்ணுவுக்கே வியாபகஞ் சிறத்தலால் யோகார்த்தமாவது நிலைத்ததன்றோவெனின், அதுயாண்டுஞ் சிறவாது. சிறந்ததாக இவர் சாதித்ததுமின்று. விஷ்ணு வியாபகர் என்பதற்கு இவர் என்ன நியாயங் கூறினார்? ஒன்றுங் கூறாமல் கணபதி வியாபகத்தை அகந்தையால் வைது அகமகிழ்ந்தார். நடுவீதிப்பிள்ளையார், சாணிப்பிள்ளையார்களைக் கண்டு ஏழைக்குடியார் பிள்ளையாருக்கு வியாபகத்வங் கூறுவதாக இவர் வருவித்துக்கொண்டு முனியன், காளி, காட்டேரி, வீரன் முதலிய சந்து பொந்து தெய்வங்களுக்கும் ஏன் வியாபகத்வங் கூறக்கூடாது என்று ஆசங்கித்து அலறினார். ஏழைக்குடியார் சொல்லாததைச்சொன்னதாக வருவித்தது மோசவித்தையாம். இவர் தூஷித்த முனியன், காளி, காட்டேரி, வீரன் முதலிய தெய்வங்களும் "யாதொரு தெய்வங்கொண்டீ ரத்தெய்வமாகியெங்கள், மாதொருபாகனார்தாம் வருவர்" என்னும் பிரமாணத்தால் சிவ வடிவமே யாகின்றமையாலும், அத்தெய்வங்களுக்கு விபூதியாகிய வைதிக சிந்நமே கேட்கப்படுகின்றமையாலும், வைஷ்ணவர்களெல்லாம் (ஐயங்கார்களெல்லாம்) சென்னைமாநகரின் சமீபத்திலுள்ள பெரியபாளயத்தில் ஆடிமாசத்தில் வேப்பஞ்சீலை கொடுத்துப் பொங்கலிட்டு மாரித்தாயை வழிபட்டுக் குழந்தை குட்டிகள் க்ஷேமமடையும் பொருட்டு மன்றாடி யுயிர்பிழைப்பதாலும், இராமதாசர்செய்த தூஷணம் அவருக்குக் கேடாகவே முடிந்தது. இந்த வழி பாடுகளினும் இவரது விஷ்ணு வழிபாட்டிற்கு என்ன விசேஷம்? இத்தெய்வங்களை யதிட்டித்துச் சிவபரஞ்சுடர் உயிர்களுக்கு அருள்வதுபோல விஷ்ணுவை வழிபடுகின்றவர்களுக்கும் அவ்விஷ்ணுவை யதிட்டித்துச்சிவபரமாத்மா அருளுமென்றறியத்தக்கது. இதனைமறுக்க இச்சையுண்டேல், "மற்றத்தெய்வங்கள், வேதனைப்படுமிறக்கும் பிறக்குமேல் வினையுஞ்செய்யும், ஆதலாலிவையிலாதா னறிந்தருள் செய்வனன்றே" என்ற தெய்வத்

திருவாக்கைப் பரியாலோசித்து வெளிவரக்கடவர். விஷ்ணுவினது வழிபாடு சந்துபொந்துகளிலும், சாணிகளிலும், தெருக்களிலும்,நடு வீடுகளிலும்கிடையாது என்று இவரேயொப்பினமையால், இவரது தெய்வத்தை வழிபடுதல் உலகத்தில் அதிக கொஞ்சமென்றேயேற்படுகின்றது. உலகமெங்கும் வழிபடுதலை வியாபகம் என்று கொண்டகாலத்தும், கணபதி வியாபகம் விஷ்ணு வியாபகத்திலெத்தனையோமடங் கதிகமென்று ஏற்படுகின்றது. இவர்களது விஷ்ணுவாகிய இராமர் நடுத்தெருவில் நட்டுப் பூசித்த கல்லுகள் நவபாஷாணம் என்று பிரசித்தி யடைந்திருக்கின்றன. இதனை யோராது நடுத்தெருத் தெய்வங்களென்று இவர் தெய்வநிந்தையி லிறங்கியது பாவக்கலியின் பண்பாம். இந்தத் தாசரதி யயாதி-பிரதர்த்தன் முதலினரோடு இயமலோகத்தில் இயமனை யுபாசித்துக் கொண்டிருந்தாரென்று பாரதங்கூறுகின்றது. இதனால், இராமர் ஜீவைகதேசி யென்பது ஸ்திரமாகின்றது. தன் தெய்வத்தின் கதியை யுணராமல் கணபதியைச் சீவன் என்று புலம்பி இவரிழிவெய்தியது இவரது மதவெறியேயாம். இவரது இராமர்நிற்க. விஷ்ணுவையே "அத்யாஸவ சாஞ்சீவ:" என்று வேதம் அறுதியிட்டுரைத்தது. இந்தச் சீவனாகிய விஷ்ணுவுக்குச் சர்வவியாபகத்வம் யாண்டுஞ் சிறவாமை சித்தம். ஈண்டு அதனை விரிப்பாம்.

விஷ்ணுவை அப்புதத்வாதிஷ்டான மூர்த்தியென்று உபநிடதங்கள் கூறுகின்றன. "உலகமுண்டோன்" என்று அவர் கூறப்படுகின்றனர். உலகமென்றது ஈண்டுப் பிருதிவி யுலகமாம். "மண்ணுண்டமால்" என்றதே முடிவாம். மண்ணையுண்டு நீரின்மிதந்துலவும் விபுத்வம் விஷ்ணுவுக்குள தென்பதை யொருவரும் மறுத்திடார். அவர் நீரின் மிதக்கையால், நீர் அவரை யுண்டதேயன்றி அவர் நீரை யுண்டிலர். நீரையுண்பது நெருப்பு. நெருப்பை யுண்பது காற்று. அக்காற்றை யுண்பது வெளி அல்லது ஆகாயம். இவைகளுக்குத் தெய்வங்கள் முறையே பிரமன்-விஷ்ணு-உருத்திரன்-மகேசுவரன்-சதாசிவன் என்பவர்களாம். இவருள், மண்முதலிய பூதங்களொன்றி னொன்று வியாபகமாயிடுதல்போலப் பிரமனைநோக்க விஷ்ணுவும், விஷ்ணுவை நோக்க உருத்திரனும், உருத்திரனைநோக்க மகேசுவரனும், மகேசுவரனைநோக்கச் சதாசிவனும் வியாபகர்களாம். நெருப்பிற் சுவறிப்போகும் நீர்போல உருத்திரனிலொடுங்கி முதலற்றுப் போகும் விஷ்ணுவுக்குச் சர்வவியாபகத்வம் நிலைப்பதெங்கே? இந

தக்கரியமாலை "விஷ்ணும்" என்பதற்குப் பொருளாக்கி "வியாபகர்" என்று கொஞ்சி யுரைத்தமதி ஈண்டென்னையது ? நிற்க.

நமது தாசர் விஷ்ணுமூர்த்தி வியாபகரென்பதற்கு யாது சாட்சிகூறினர்? சிவனரது வியாபகத்துக்கு அவர் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியாயோகிருந்தது, அம்மையார் சிவனரது திருக்கண்களை மூடியது, சிவபெருமான் வில்லடி பிரம்படிகளைத் தாங்கியது முதலிய சரித்திரங்கள் சாட்சியாம். கம்பத்தின் முளைத்த சிங்கத்தின் கதை விஷ்ணுவினது வியாபகத்தை நிறுத்தாதோவெனின், ஒரு கம்பத்தின் முளைத்த சிங்கத்தை யுலகமெங்குங் கண்டதில்லை யாகையாலும், கண்ணன் கோபிகைக ளில்லந்தோறு மிருந்தபடிச் சௌபரி முனிவர் தமது பத்னிகண் மனைகடோறுமிருந்து விளையாடிய சரித்திரம் உண்மை நூல்களிற் கேட்கப்படுகின்றமையாலும், விஷ்ணுவினது வியாபகத்வம் நிலைபெருதடங்கிய தறிக. அன்றியும், வைஷ்ணவ சித்தாந்தத்தில் விஷ்ணுவுக்கு உருவத்தையே முக்கியமா யொப்பியிருக்கின்றனர் அச்சமயப் பெரியோர். உருவம் வியாபிக்கமாட்டாது. அன்றியும் விஷ்ணுவினது வடிவம் பிராகிருதம். அப்பிராகிருதமென்று கொஞ்சுவது வீண்வார்த்தை. "வாசுதேவ: பராப்ரக்ருதி:" என்பது வேதம். "ப்ரக்ருதி: பரமோவிஷ்ணு:" என்பது புராணம். இவைகளை மறுக்க முடியுமோ? வசுதேவன்-தேவகி, தசரதன்-கோசலை முதலினோரது சுக்கில சோணிதபரிணமதேகங்கள் அப்பிராக்ருதமோ? இந்தப் பிராகிருத தேகதாரியாகிய விஷ்ணுவுக்கு எங்ஙனே வியாபகத்வம் பிராப்தமாம்? எவ்வாற்றானும் விபுவாகாத விஷ்ணுவை வியாபகர் என்று மெச்சி நச்சு மேழைகண் மதம் அவலமாய்ப் போய்விட்டமையால், நமதுதாசர் கண்டுபிடித்த வியாபகத்துக்குக் கிரகணம் பிடித்ததறிக.

எமது கணபதியை வியாபகர் என்பதோவெனின், இந்தக்கணபதியைத் திரிமூர்த்திகளினும் அல்லது பஞ்சகர்த்தாக்களினு மப்பாற்பட்ட துரீய சிவத்தினது அபேதாவதாரமாக யாமொப்பி யிருக்கின்றோம். அத்துரீயசிவம் "இன்ன தன்மையனென்றறியாச் சிவன்" என்றுவந்திக்கப்படுகின்றனர். அவருக்கு உருவம்—அருவம்—உருவருவம் என்பவை அருட்கோலங்கள். அவற்றுள், அருவத்திருமேனியால் வியாபித்திடுதல் சிறக்கும். இதனல், கணபதியை யாம் வியாபகர் என்றது அவரது அருவத்திருமேனியைச் சுட்டித் துதித்தபடியா மென்றறிக. விஷ்ணுவினது மகிமை யனைத்தும் இராமகி

ருஷ்ணாதிகளுக்குச் சிறந்திடல்போலத் துரீய சிவனாரது மகிமை யனைத்தும் ஸ்கந்த கணபதிகளுக்குச் சிறந்திடுமென்றறிக. நிற்க.

வேதமானது "அந்தர்ப்பஹிச்ச தத்ஸர்வம்-வ்யாப்ய நாராயண ஸ்தித:" என்று கூறியதென்னையெனின், பிருதிவியினுள்ளும் வெளியும் வியாபகர் என்று பொருள்படுவதை யாம் மறுத்திலமென்க. சிவனாரது வியாபகம் அல்லது கணேசரது வியாபகமோவெனின், "ப்ருதிவ்யோபவ:- ஆபச்சர்வ:- அக்நேருத்ர:- வாயுர்ப்பீம:- ஆகாசஸ்ய மஹாதேவ:-ஸூர்யஸ்யோக்ர:--சந்த்ரஸ்யஸோம:- ஆத்மாந:- பசுபதி:" என்று சுருதி கூறுகையால், சர்வ சேதனா சேதனங்களி னிடத்தும் பிரசித்தியாதல் கண்டறிக. இவ்வாறு பிரகாசப்படுத்த யோக்யதை கெட்டிருக்கும் பூர்வபட்சியார் விநாயகரது வியாபகத்தை நிந்தித்தது அவரது பாவத்தின் பயனேயாம்.

இனி "விநாயகர்" என்பதற்குத் தனக்குமேலொரு நாயகரில்லாதவர் என்று பொருளுண்டாம். எப்பொருட்கும் இறைவரென்பதையே இந்தநாமம் தெரிவிக்கின்றது. விஷ்ணுவாதிகளை அடிமையாக வுடையவரென்பதே அதன்முடிந்த பொருளாம். இவருக்கே வியாபகத்வஞ் சிறக்குமாகையால், ஏழைக்குடி யிசைத்த கணபதி வியாபகத்தை வந்தித்து யாம் அப்பாற் போவோமென்க.

எமது கணேசருக்கு விநாயகர் என்னும் பெயர் யோகமாக வமைந்ததன்றியும் ரூடியாகவும் பெறப்பட்டுள்ளது. அதனாலவருக்கது யோகரூடியாம். தனக்கு மேலொரு நாயகரில்லாமையைப் பின் சுருதியாலறிக. கணபத்யுபநிஷத்து "ஓம் லம் நமஸ்தே கணபதயே" என்று தொடங்கி "த்வமேவப்ரத்யக்ஷம்—த்வம்ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி—த்வம்ப்ரஹ்மாத்வம் விஷ்ணுஸ்த்வம் ருத்ரஸ்த்வமிந்த்ர:" என்று கூறியது. திரிமூர்த்திகளும் இந்திரசந்திராதிகளும் கணபதியினது விபூதிகளென்று கூறினமையால், ஈண்டுக் கணபதியாவார் துரீயப்பொருளென்று நிச்சயிக்கப்பட்டனர். இத்துரீய கணநாதர் துரீய சிவனாருக்கு வேறாகாதவர். அவருக்குமேற் போகாதவரென்பது போதர அவ்வுபநிஷத்துத்தானே "ஏகதந்தாய விக்நவிநாசிநே சிவஸுதாய வரமூர்த்தயே நமோ நம:" என்று கூறியது. இவ்வாறு பெறப்பட்ட எமது அருளாளரை அவ்வுபநிஷத்துத்தானே "ஓம் கணாதீந்பூர்வ முச்சார்யவர்ணாதீந்—ததநந்தரம் அநுஸ்வார: பரதர அர்த்தேந்துலஸிதம்ததா—தாரேண யுக்தமேததேவதவ மநுஸ்வரூபம்-ககார: பூர்வரூபம்—அகாரோமத்யமரூபம்—அநுஸ்வாரச் சாந்த்

யரூபம்—பிந்துருத்ரரூபம்—நாதஸ்ஸந்தாநம்” என்று கூறிப் பிரண வப்பொருள் கணபதியேயென்பது போதர ஓங்காரத்தினது அங் கப்பிரத்யாங்கங்களை யெல்லாம் விளக்கியாவும் கணேசரது திருமே னியே யென்பதைப் பிரகாசப்படுத்தியது. இவர் பிரணவப்பொரு ளாகவும், பிரணவஸ்வரூபராகவும் பிரதிபாதிக்கப் பட்டபடியே இ வருக்கு வேறாகாத இவரது திருத்தம்பியார் சண்முகக்கடவுள் “ஸுப்ரஹ்மண்யோம்—ஸுப்ரஹ்மண்யோம் — ஸுப்ரஹ்மண்யோ ம்” என்று முக்கால் கூறப்பட்டுப் பிரணவஸ்வரூபி யென்று பிரசித் தியடைந்தனர். இவர்களதுதாய் “உமா” என்று பிரசித்தியடைந்து உ—ம்—அ எனவிளங்கி ஓங்காரவாச்யராய் வெளிப்பட்டனர். இவ ர்களை யெல்லாந் தன துறுப்பாகவுடைய பரசிவம் “சிவோமே அஸ் து ஸதாசிவோம்” என்றுவிளங்கிப் பிரணவார்த்தஸ்வரூபியாயினர். இவைகளைப் பரியாலோசிப்பார்க்கு “பிரணவப்பொருளாம் பெருந் தகையைங்கரன்” என்றுபெரியோர் துதித்தது ஸாமஞ்சஸமாகத் தட்டில்லை. இதனையவலம்பித்து நமதேழைக்குடியார் “பிரணவப் பொருளாகிய விநாயகக்கடவுள்” என்று பிரஸ்தாபித்தது வைதிக மாக முடிந்தது. இதனை மறுக்கமுந்திய அவைதிகபுஞ்சமாகிய இ ராமதாசர் “சர்வேசனைப்போலப் பிரணவமும் அனாதியாயுள்ளதெ ன்பதே திண்ணம்” என்றுகூறி மகிழ்ந்தார். பிரணவம் அநாதியெ ன்பதை ஈண்டு யாம் மறுக்கவந்திலம். இவர் “சர்வேசன்” என்றது யாரை? இவரது விஷ்ணுவையே யன்றோ? விஷ்ணுவை வேதமா னது “அத்யாஸவசாஞ்சீவ:” என்று ஓதுக்கியதை இவரறியார்! அ றியார்!! சுக்கிலசோணித பரிணாம தேகங்களைத்தாங்கிப் பிறந்துழ ன்று செத்து ஆடல்படும் விஷ்ணுவை நமதன்பர் எந்தமதிகொண் டோ “சர்வேசன்” என்றுகூறத் துணிந்தது? “சீவனுமாலைச் சிரிப்ப ன்றோவீச னெனல்” என்று மேலோர் கூறிய வுண்மையை யுய்த்து ணராதெழும்பிய தாசரது அபசித்தாந்தம் தலைகவிழ்ந்ததறிக. இரா மனும் பரசுராமனும் பதிவர்க்கமாயிருந்தால் இராமனுதைக்கவும், பரசுராமனுதைபடவும் நேரிடுமா? உதைத்த விஷ்ணு, உதைபட்ட விஷ்ணு என்று கொண்டாடப்பெறும் பத்தஜீவனை ஈசன்—பரமே சன்—சர்வேசன்—மஹேசன் என்று துதித்தல் ஆசைவெட்கமறி யாதென்பதற்கே இனஞ்செய்தவாறறிக. நிற்க.

இந்தத் தாசர் பிரமன் ஒருவருஷம் தீக்ஷிதனாயிருந்து உஷஸ் ஸியினிடத்தில் கர்ப்பா தானம் பண்ணினனென்றும், அப்போது

சிவன் பிறந்தானென்றும் சதபதப் பிரமாணங் கூறுவதால், இச்சிவனுக்குப் பிறந்த விநாயகன் அநாதியாவதெப்படி ? என்றுசங்கித்து அநாதியாகாத விநாயகன் அநாதியாகிய பிரணவத்துக்குப் பொருளாவது கூடாதென்று பிரசங்கித்தார். இவர் பிரணவம் அநாதியென்றபடி அதன் பொருளாகிய விநாயகரும் அநாதியென்றதை மேலே உபநிஷத் பிரமாணங்காட்டி யடக்கினேம். இவர் காட்டிய சதபதப் பிரமாணத்தில் சிவனுக்குப் பிறந்த விநாயகன் அநாதியன்று என்று கூறியதில்லை. பிரமனது மகனாக இவர் தேடிய சிவன் எங்கள் பரசிவமன்று. அந்த ருத்ரன் நமது தாசரது தெய்வமாகிய விஷ்ணுவோடும், பிரமனோடும், இந்திரனோடும் சம்புவினிடம் பிறந்து "நகாரணம்" என்று அதர்வசிகையா லொதுக்கப்பட்டவர். வேதமூலங்காட்டி யாமொதுக்கு முருத்திரனை நமதன்பர் பிரமனுக்குப் பிள்ளையென்று எடுத்துக்காட்டியதனு லெமக்குண்டான நஷ்டமொன்றுமில்லை. அவ்வுருத்திரன் பிரமனுக்குப் பிள்ளையாவதிலும் வேறொருத்தருக்குப் பிள்ளையாவதிலும் பாதகமில்லை. இவ்வுருத்திரன் பிரமனுக்குப் பிள்ளையானபடி விஷ்ணுவும் அப்பிரமனுக்கொரு கால் பிள்ளையாய்ப் பிறந்தனர். உருத்திரன் பிரமனது நெற்றியிற் பிறந்தபடி விஷ்ணுவானவர் அந்தப்பிரமனது குதத்திற் பிறந்தனர். இவ்விருவரும் உருத்திரனது கால்களி லோர்காற்பிறந்தனர். இந்த மூவரும்சீவர்களேயாகையால் இன்னோரொருவரிடத்திலொருவர்பிறப்பது கற்ப பேதத்தினுற் பெறப்பட்டு "ப்ரஹ்மா விஷ்ணுச்சருத்ரச்ச—ஸர்வேவர்பூதஜாயத:—நாசமேவாநுதாவந்தி" என்று உபநிஷத் பிரமாணத்தா லொதுக்கப் பெற்றனர். இவர்களுக்கெல்லாம் ஜநகராய் விளங்குந் துரீயசிவனரது சுதராய் விளங்கிய எமது கணநாதரிடம் பூர்வபட்சியேற்றிய தோஷம் நிஸ்புருஹமாயொதுங்கியதறிக. அன்றியும், வக்ரதுண்ட கணபதியினுடைய திருவயிற்றில் மும்மூர்த்திகளு மோர்காலத்தி லொடுங்கியிருந்து, பின்னர் அவரது புழைக்கை வழியாகவும், அவரது இருசெவிகளின் வழியாகவுந்தோன்றிய திவ்யசரிதம் பார்க்கவபுராணத்திற் கேட்கப்படுகின்றது. இந்த வக்ரதுண்டகணபதியை "ஏகதந்தாயவித்மஹே வக்ரதுண்டாயதீமஹி—தந்நோதந்திப்ரசோதயாத்" என்று வேதம் புகழ்ந்து அவர் காயத்திரிப் பொருளாதலையும் பிரகாசப்படுத்தியவாறறிக. இவ்வுண்மை தேர்ந்தா ரவைக்கண்ணே நமது தாசரது வீண்பூசல் கனம்பெறுதழிந்ததறிக. நிற்க.

இத்தாசர் "சசிவர்ணம்" என்றது விநாயகருக்கு அடாது என்றுபிரசங்கித்தார். அதற்குமேல் "சுரசுரப்பும் கருமையும் உள தேகிக்கு வெள்ளியமேனி எவ்விதம் பொருந்தும் எனவும், மேற்பூசியுள்ள பஸ்பத்திற்கெனிலோ வியர்வை யுண்டாயின், அப்பூதி தனக்குந் தெரியாதழிந்து போமே" எனவும் வியாக்யானஞ்செய்தார். பன்றியுடலெடுத்துச் சாபத்தினுலுழன்ற மலதேகியாகிய வராக மூர்த்திக்கு இவர் சுரசுரப்பையும், கரிய காட்சியையுங் காணுதவராகையால், எமதப்பனை அவ்வாறிழித்துரைக்க விசைந்தார்போலும். மலதேகிக்கே வியர்வையுண்டாகும். எமதையன் "த்வம்சிந்மய:" எனவும், "த்வம்ஜ்ஞாநமய:" எனவுங் சுருதியாற்பூஷிக்கப்பட்டமையால், வியர்வை-அழுக்கு-நாற்றமுதலிய பிராக்ருததேக தர்மாரோபணம் அடாதெனவறிக. இவர் கோசலைமகன்-தேவகிமகன்-ரேணுகை மகன்-மீன்-ஆமை-பன்றி-சிங்கம்-குறளன்-குதிரை முதலிய பிராகிருத தேகங்களை மதித்தது போல விநாயகரையும் எண்ணினுர் கண்டீர். இவரது உபாசனு மலதேகங்கள் யோநிவாய்ப் பட்டுப் பிறந்து செத்தவை. அவைகளுக்கு வியர்வை-அழுக்கு முதலியன ஸம்பாவிதமாம். எமது வாரணமுகத்தண்ணல் பிறவாதவர்-சாகாதவர். இவரிடம் வியர்வை முதலிய அஸம்பாவிதங்கள் கேட்கப்படமாட்டாவெனவறிக.

இனி விநாயகர் சசிவர்ணராதல் சாதிக்கப்படுமாறு யாங்ஙனமெனின், அதனைக் கூறுதும். சசம் என்பது முயல். இதனுல் சசியென்பது முயற்கறை யுடையவன் என்று பொருள்படும். அதற்குமேல் சசிவர்ணம் என்பது முயற்கறை யுடைய சந்திரனது நிறம் என்று பொருள் படும். இதனைப் பரியாலோசிக்கின், சந்திரனது சுபாவ நிறம் வெண்மை. அவனதுட்காட்சிநிறம் கருமை. ஆக இரு நிறங்கள் கலந்தமையையே சசிவர்ணம் என்பது தெளிவிக்கும். இனி எமது கணநாதர் "நெஞ்சிற் குடிகொண்ட நீலமேனியும்" என்று உலகன்னை ஒளவையாரால் வந்திக்கப் பெற்றனர். இந்த நீல மேனியின்மேல் பஸ்மலேபநம் கேட்கப் பட்டமையால் "வெள்ளை வாரணப் பிள்ளையார்" என்பது உசிதமாயிற்று. இதனையே "முகத்தாற் கரியனென் றுலுந்தனையே முயன்றவர்க்கு, மிகத்தான் வெளியனென்றே மெய்ம்மையுன்னும் விரும்படியார்" என்று எமது நம்பியாண்டார் நம்பிகள் அருளிச்செய்தனர். இவ்வுண்மைதேராது "காரானை மாமுகனே" என்று இவரெடுத்துக் காட்டிய துண்டுவாக்கியத்

துக்கு யாமஞ்சுமாறுயாங்ஙனம்? இதனை யுய்த்துணரின், நமதுபூர்வ பட்சியார் வெள்ளை வாரணப்பிள்ளையாரைத் தூஷிக்க வெளிவராரென்க. அன்றியும், பார்க்கவ புராணம் லீலா காண்டத்தில், மயூரேசர் திருவவதாரப் படலத்தில் விநாயகக் கடவுள் கிரேதா யுகத்தில் பத்துக்கைகளும் சோதி யுருவமும் சிங்க வாகனமும், திரேதா யுகத்தில் ஆறு கைகளும் வெள்ளை மேனியும் மயில் வாகனமும், துவாபரயுகத்தில் நான்கு கைகளும் செக்கர் மேனியும் மூஷிக வாகனமும், கலியுகத்தில் இரண்டு கைகளும் நீல நிறமும் குதிரை வாகனமுங் கொண்டு விளங்குவதாகக் கூறப்பட்டிருக்கின்றது. இன்னுமிவ்வாறு பல விடங்களிற் கூறப்பட்டிருக்கின்றது. இவைகளை யநுசரித்தே மெய்யன்பர்கள் எமதப்பனை மேகநிறம்-சுவேதநிறம்-செந்தீ வண்ணமுதலிய பலநிறங்களை யுடையவராகத் துதிக்கின்றனர். இவற்றைத் தெரிந்து வந்திக்கும் புண்ணியமின்றி "சசிவர்ணம்" விநாயகருக்கடாது என்றாத்தை வாய் திறந்த எதிரி மதம் இளிச்சவாயன்மதமாயினதறிக. நிற்க.

இவர் "பிரசந்நவதனம் என்ற வாக்கியத்தில் விநாயகக் கடவுள் என்ற பொருள் எங்கொளித் திருக்கின்றதோ தெரியவில்லை" என்று விதண்டை பேசினர். பிரஸந்நவதனம் என்பது பிரத்யக்ஷமுகம் என்று பொருள்படும். கணபத்யுபநிஷத்தில், அவரை "த்வமேவப்ரத்யக்ஷம்" என்றும், "த்வம் ப்ரத்யக்ஷம்" என்றும், "ப்ரஹ்மாஸி" என்றுந் துதித்திருத்தலால் "ப்ரஸந்நவதனம்" என்பதற்கு விநாயகக் கடவுளை விளக்கப் பொருளாக்கிய ஏழைக்குடியார்மதமேற்றமடைந்தது. எமது கணநாதர் பிரத்யக்ஷப்பிரஹ்மம்—பிரஸந்நவதநம் என்று படிக்கப்பட்டவாறு ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியுபநிஷத்தில் இவரது செல்வப்பிதா (சிவபரஞ்சுடர்) "முத்ராபுஸ்துக வஹ்நிநாக விலஸத்—பாஹூம் ப்ரஸந்நாநநம்" என்று படிக்கப்பட்டனர். பிரசந்நாநனம்-பிரசந்நவதனம் என்பனவொன்றே யாகையால் எதிரியினது அஸங்காத்மவாத மிறந்தொழிந்த தறிக.

இனி யொன்று கூறுகிறோம். "உயர்வறவுயர் நலமுடையவனெவன்" என வொருவர் கூறினர். அதற்குரை யெழுதிய மற்றொருவர் "எவன்" என்றதற்கு எந்த நாராயணன் என்று பொருள் கூறினர். இதனை நமது தாசர் பார்த்திடின், எவன் என்பதில் நாராயணனென்ற பொருள் எங்கிருக்கிறதோ தெரியவில்லையென் றுசங்கை யெழுப்பி யுள்ளம் புழுங்குவார் போலும். விஷ்ணு பரமான

தாக வதனை யறிந்த உரையாசிரியர் அதற்கவ்வாறு பொருள்விரித்தது ஸஹஜமாம். அப்படியே விநாயகர் பரமானதாக ஏழைக்குடியாரெண்ணிய பிரஸந்நவதனத்துக்கு அவரவ்வாறு பொருள் விரித்தது ஸாமஞ்சஸமேயாம். வேண்டுமாயின், நமது தாசர் "பிரஸந்நவதனம்" என்பதற்கு விஷ்ணுவைப் பொருளாக்கி யுரை செய்யட்டும். அவரதனைத் தனது தேவதாபரமாக மதித்தமையால், அவ்வாறு பொருள்கோடலிழுக்காது. அவரது பொருளை யாம் வேறு நியாயங்களான் மறுப்ப தொழிந்து அவர் கூறிய இழிமார்க்கத்தி லிழிந்திடர்ப்படேமென்க. இவைகளேயன்றி இன்னுமொரு முக்ய சமாதானங் கூறுகின்றோம்.

பிரஸந்நவதனம் என்பதற்கு யானைமுகம் என்று பொருள்கூறுவதே யாம். "ப்ரஸந்நோமத்த வாரண:" என்று நிகண்டு கூறுவதிவருணரார். இதனை யுணர்ந்த மேலோர் விநாயகபுராணம் கடவுள் வாழ்த்தில் "ஒருகோடு முகத்தணிந்த பிரசந்ந விநாயகனை" என்று துதித்தனர். இயற்கையாக யானைகளுக்கு முகத்தி லிரண்டு கொம்புகளிருப்பதால் விநாயகராகிய யானைக்கு முகத்தில் ஒரு கொம்புளதென்பது விளங்கப் பிரகாசப்படுத்தியவாறறிக. இதனால் பிரசந்நவதனம் என்பது யானைமுகம் என்று நிச்சயிக்கப்பட்டு "ப்ரஸந்நவதனம் த்யாயேத்" என்று விநாயகக்கடவுளையே தியானித்த வாய்மை நிலைபேறுயிற்று. விரிக்கிற்பெருகும். நிற்க.

இவர் "ஸர்வவிக்நோப சாந்தயே" என்ற பகுதிக்கு விநாயகக் கடவுள் விக்னங்களைப் போக்குகின்றவர் என்று ஏழைக்குடி யெழுதிய வுரையை மறுத்தார். விக்னங்களைப் போக்குந்தன்மை விநாயகரது தந்தையாகிய சிவனுக்கே யில்லாதிருக்கவும், அவ்விநாயகருக் கெவ்விதமுண்டாகுமெனவும், அச்சிவன் முனிவர்க்குக் கண்ணைக் காட்டிப் பிரணவப் பொருளாகிய விஷ்ணுவே முத்தி நாதனென்றுணர்த்தி, அவனை யடைதிரென் றுபதேசித்தானென்று அரிவமிசங் கூறுவதாக இருசமய விளக்கம் போதிக்கின்றதெனவும், வாலி ராவணன் முதலினோர்காலத்தி லிவரேன் சாந்திசெய்ய வொண்ணுதெனவும், விருகாசுரனுக்கஞ்சி யோட்டமெடுத்த வுருத்திரனை இவர் காவாததற்கு ஹேது என்னை யெனவும், கஜத்தின் வேண்டுகோளில் "தெய்வங்கட்காதியானவன் என்றுயரை நீக்கி ரக்ஷிக்கக்கடவன்" என்ற வந்நாள் "இவ்வேழமுகத்தோ னெங்கோடி யொளித்தனன்" எனவும், வாணுசுரன் சண்டையில் குறுங்காலும் பெருவயிறுமு

டைய கணபதி "மோடியோட வங்கி வெப்பு மங்கி யோட வைங்க ரன் முடுகியோட" என்று பிரஸ்தாபிக்கப்பட்டவாறு என்னை யெ னவும் வினவிய இவரது மதுகை யுடையுமாறு சில ஈண்டுவரை வாம்.

சிவகுமாரராகிய எமது கணநாதருக்கு "விக்னேசுவரர்" என் னுந் திவ்ய நாமம் நிகண்டுக்களில் படிக்கப்பட்டிருக்கின்றது. இது ரூடியாகவும், யோகமாகவும் பெறப்படுகின்றமையால், இதனை யோ கரூடியாக எம்பெருமானிடங்கொண்டு மகிழ்வர் பெரியோர். இவ்வு ண்மை "ஏகதந்தாய விக்ன விநாசிநே" எனவும், "ஸஸர்வ விக்னைர் நபாத்யதே" எனவும், "மஹாவிக்நாத் ப்ரமுச்யதே" எனவும் போ ந்த வேதாந்த சிரவணத்தாலும் பெறப்பட்டவாறறிக. இவற்றோடி னமாகி நிலைபேறெய்திய "ஸர்வவிக்நோபசாந்தயே" என்னும் பகு திக்கு விக்னேசுவரர் பொருளாகமாட்டாரென்று பொங்கிவழிந்த பூரியர்மதம் அநாதரணியமாயினதறிக.

இவர் விக்னத்தை நிவர்த்திபண்ண மாட்டாதவரென்று புலம் பிய மதியில் இவரது ஹயக்ரீவ ரவ்வாறுசெய்ய வல்லவரென்று பு லப்படும் பட்சத்தில் அதற்கேற்ற விரண்டொரு வசனங்காட்டியன் றோ முந்தவேண்டும்? அஃதொன்றுமின்றிச் செருக்குவார்த்தைக ளைத்தீட்டிச் சீரழிவதொரு பெருமையா? இனி விக்னேசுவரர் என் னுந் திருநாமத்துக்குத் தம்மை வழிபடாதவர்களுக்கு விக்னங்களை யுண்டுபண்ணுகின்றவரெனவும், தம்மை வழிபடுகின்றவர்களுக்கு விக்னங்கள் சேராவகை முன்னிற்பவரெனவும் பொருள்கூறுவர் பெரியோர். அன்றியு மிவ்விக்னேசுரத்வம் சிவபரஞ்சுடரா லவருக் குக் கொடுக்கப்பட்டது. உலகிலொருவ ரொருகாரியத்தைச் செய் யத்தொடங்குகையில் முதல் உன்னை யாராதிக்கக்கடவர். அப்படி யாராதியாதவர்களுக்கு விக்னங்கள் செய்யக்கடவாய். ஆராதிக்கின் றவர்க ளெடுத்த காரியங்களை நிர்விக்னமாய் முடிக்கக் கடவாய் எ ன்று பிரஸாதித்த சிவசங்கற்பம் பரிபாலிக்கப் பட்டுவரு மிச்சீருல கில் நமது தாசரது வீண்பூசல் சீவிப்பதெங்ஙன்? இவற்றை யெல் லாமுணராமல் விக்னங்களைப்போக்கு மாற்றல் சங்கரனுக்கில்லை, அ வரது தநயருக்கில்லையென்று சிவதூஷணத்தி லிறங்கியது எதிரியி னது மதியீனமேயாம்.

நமது தாசர் விக்ன நிவர்த்தித்வ மின்னதென்றுணரமாட்டா மல் கபோதித்தனமாய் வீண்விஷயங்களை வருவித்துக்கொண்டு

சில பாட்டிக்கதைகளையோதி விஷ்ணுபரத்வஞ் சாதித்தாராகையா லதனையுஞ் சிறிது யோசிப்பாம். அரிவமிசத்தில் மோக்ஷகர்த்தாவெ ன்று கூறியதறிந்து பிரணவசொரூபியாகிய அவ்விஷ்ணுவையே யடைந்துய்திரென்று முனிவர்களுக்குக் கண்சாடைகாட்டிச் சிவனு பதேசித்தது விக்னநிவர்த்தி செய்கின்றவர் விஷ்ணுவென்பதற்கு உபகாரமாயிடுதல் யாங்ஙனம்? இவர் காட்டிய இருசமய விளக்கப் பாட்டில் விஷ்ணு பிரணவசொரூபி-விஷ்ணு மோக்ஷகர்த்தாவென் பனவேயன்றி விஷ்ணு விக்னேசுவரர் என்று பெறப்பட்டதின்று. மோக்ஷகர்த்தாவுக்கு விக்னேசுவரத்வமுங் கூடுமெனின், பிரகிரு தோப யுக்தமாகிய விக்னேசுவரத்வத்தைவிட்டு மோக்ஷகர்த்ருத்வ சாதனையிலிறங்கியது அவிவேகமாம்.

இனி மோக்ஷகர்த்தாவுக்கு யாவுங்கூடுமாயினும், தைத்யாரி-பி ரணவரூபி-வேதரூபி முதலிய நாமங்களால் தனித்தனிக்கொண்டா டிவிஷ்ணுமகிமையை நன்கு பிரகாசப்படுத்துதல்போல விக்னங் களைப் போக்குகின்றவரென்று பொருள்படத்தக்க விக்னேசுவர நா மத்தையுஞ் சுட்டிவந்திக்கும் பிரமாணங் காட்டப் பதுங்குவது பூர் வபட்சிக்கு முழுத்தோல்வியாம். ஆகவே, விக்னேசுவரநாமம் விஷ் ணுவுக்கு எத்தனைகோடி ஜன்மம் தவங்கிடந்தாலும் கிட்டுவது அரி தெனவறிக. எடுத்துக்கொண்ட விஷயத்துக்கேற்ற பிரமாண பிரமே யங்களைத்தேடாமல், மற்ருென்றுவிரித்தல் - மாறுகொளக்கூறல் - வெற்றெனத் தொடுத்தல் முதலிய எல்லாவமங்கலங்களு நிரம்ப நம துதாசர்செய்த பிரசங்கத்துக்கு உபஜீவனமெங்கே? இனியவர் வி ஷ்ணுவுக்குத் தேடிய பிரணவசாதனை-மோக்ஷசாதனைகளைப்பற்றிச் சிறிது விசாரிப்பாம்.

அகார உகார மகாரங்களாகியது ஓங்காரமாகிய பிரணவம். இ தில் அகாரம் பிரம்ஹாவினது சொரூபம்—உகாரம் விஷ்ணுவினது சொரூபம்—மகாரம் உருத்திரனது சொரூபம்—ஓங்காரம் ஈசுவர ஸ்வரூபம். இதனை "அகாரம் ப்ரஹ்மாணம் நாபௌ—உகாரம் வி ஷ்ணும் ஹ்ருதயே—மகாரம் ருத்ரம் ப்ரூமத்யே-ஓங்காரம் த்வாத சாந்தே விஷ்ணுச் சேச்வரச்சேதி" என்னும் பிரஹ்மோப நிஷத் வாக்யம் போதிக்கின்றது. இதனுல் பிரணவத்தி ஞெருகூறு விஷ்ணு சொரூப மென்று ஏற்படுகின்றது. இவ்வொரு கூற்றிலடங்கிய விஷ் ணுவை ஸர்வப்பிரணவாத்மகரா யுரைத்தது என்னமதி? இவ்வொ ரு கூறேனும் விஷ்ணுவுக்குச் சொந்தமோவெனின், கூடாது. எங்

ஙனமெனின், விஷ்ணுவுக்கிது சொந்தமாயின், பிரமருத்ரர்களுக்கு அகர மகரங்கள் சொந்தமாம். மூவருக்கும் மூன்றெழுத்துக்களுஞ் சொந்தமாயின், இம்மூனறெழுத்துக்களாலாகிய ஓங்காரத்துக்குச் சொந்தமாகிய பரமேசுவரர் இம்மூவரு மொன்ருய பரம்பொருளாம். இவ்வாறு கோடல் மாயாவாதிகள் கூற்ரும்.

இதனுவுண்டாகு மிழுக்கென்னை யெனின், சுருதி "ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரேந்த்ராஸ் ஸம்ப்ரஸூயந்தே-நகாரணம்" என்று திரிமூர்த்திகளையுந் தியஜித்தலாலன்னோர் பரம்பொருளாயிடுதல் கூடாது. அங்ஙனமாயினிவர் கிருத்யகர்த்தர்களாயிடுதல் யாங்ஙனமெனின், சிவ பரஞ்சுடரிவரையதிட்டித் தியக்கலாலென்க. இன்னோர் அகர உகர மகரங்களிற் குடியிருந்து தொழில்செய்பவராம். இவருள், பிரமன் அகரத்துக்கேயன்றி உகர மகரங்களுக்கும், விஷ்ணு உகரத்துக்கேயன்றி அகரமகரங்களுக்கும், உருத்திரன் மகரத்துக்கேயன்றி அகர உகரங்களுக்கும் அதிகாரிகளாயிடாரென்க. ஒரு பெரிய கிருகத்தில் மூன்றுஅறைகளில் தனித்தனிக் குடியிருப்பவர்களை அவ்வறைகளுக்குச் சொந்தக் காரர்களாய்க் கோடலமையாவாறுபோல வியஷ்டிப் பிரணவ வீடுகளிற் குடிபுகுந்து வாழும் பிரமனுதியரை அவற்றின் சொந்தக்காரரா யெண்ணுதல் கேவலம் அஸங்கதமாம். ஒரு அறைக்கே சொந்தக்கார ராகாதவரை முழுகிருகத்திற்குச் சொந்தக்காரரா யெண்ணு மூடர் செய்கை யொத்து நமது தாசர் விஷ்ணுவை ஓங்காரவாச்யர்- அல்லது பிரணவ வாச்யர் என்று தடுமாறியது அவரது மூடஞானத்தின் பயனேயாம். நிற்க.

விஷ்ணு மூர்த்தி உகரத்திற் குடி யிருப்பதினின்றும் பெயர்ந்து அகர மகரங்களிற்குடி போக முடியாது என்று மேலே கூறினுமன்ருே? எதனுலெனின், வாயை யங்காத்தல் அகரம். இது சிருட்டி. திறந்த வாயை அப்படியே குவித்துநிலை பெறுவித்தல் உகரம். இது ஸ்திதி. அந்த வாயை மூடுதல் மகரம் இது சங்காரம். சிருட்டித்தல் பிரமனது தொழிலும், காத்தல் விஷ்ணுவினது தொழிலும், சங்கரித்தல் உருத்திரனது தொழிலுமாமெனல் யாவரு மறிந்த விஷயம். இந்த முறை யுணர்ந்தவர்கள் விஷ்ணுவைச் சிருட்டி கர்த்தாவெனவாவது, உருத்திரனைத் திதி கர்த்தாவெனவாவது, பிரமனைச்சங்கார கர்த்தாவெனவாவது, மற்றுமிவர்களை வேறு விதமாகவாவது கூற விசையாரென்க. அன்றியும் சிருட்டி கர்த்தாவாகாத விஷ்ணுவை அகாரவாச்ய ரெனவாவது, திதி கர்த்தா வாகாத உருத்திரரை உ

காரவாச்ய ரெனவாவது, சங்கார கர்த்தா வாகாத பிரமனை மகார வாச்ய ரெனவாவது, மற்று மிவர்களை யிவர்களுக்குப் பொருந்தாத வேறு எழுத்துக்களின் வாச்யர்களெனவாவது நியாயவாதிகள் கூறத் துணியாரென்க. இங்ஙனமாகவும், நமது தாசரும் அவரினத்தவரும் விஷ்ணுவை அகார வாச்யன் என்று கொண்டாடி மகிழ்வர். இது சர்வாஸங்கதம். கீதையிற் கண்ணன் "அக்ஷராணாம் அகாரோஸ்மிந்" என்று கூறினரெனின், அவ்வாறு கூறியது பிரஹ்ம பாவனையினாலாம் கண்ணன் பிரஹ்ம மாகாமைக்கு "கிம்தத்ப்ரஹ்மா" என்று கண்ணனை அர்ஜுனன் கேட்ட கேள்விக்கு "அஹமேவ பரப்ரஹ்மா" என்று கூறாமல். "அக்ஷரம் ப்ரஹ்மபரமம்" என்று அந்தக் கண்ணன் விடை யிறுத்தமையே சாக்ஷிபகரும். அன்றியும், "ஜந்ம கர்ம தபோயோகா:" என்னும் பாரத வசனத்தால் ஜந்மம்- கர்மம்- தபசு- யோகம் இவைகளால் கண்ணனும் அர்ஜுனனுமொத்தவர்களென்று பெறப்பட்ட வாய்மையும் கண்ணன் பிரஹ்ம மாகான்- அர்ஜுனனைப்போல ஒருஜீவன் என்பதைநிறுத்தும். இதனுல் கீதை முழுதும் சிவபாவனை மேற்கொண்டு கண்ணன் கூறினனெனல்சரதமாயிற்று. அன்றியும் அவ்வகார வாச்யத்வம் பிரணவத்தைக் குறித்ததன்று. "அகரமுதலவெழுத்தெல்லாமாதி பகவன் முதற்றேயுலகு"என்னுந் திருக்குறளின் பொருளை மேற்கொண்டது. இதிற்போந்த அகரம்சிவம் உடலுயிர்கடோறும்விரவி அவைகளையியக்குதலுக்கு நிதரிசனமாம். விஷ்ணுவுக்கு விபுத்வமில்லாமையை மேலே யாம் நன்கு பிரகாசிப் பித்திருக்கின்றோ மாகையாலீண்டிவ்வளவினிறுத்தினும். இவற்றை நன்கு தெளிந்த பெரியோர் சிவபரஞ்சுடரே அகார வாச்யரெனவும், அகார உகார மகாரங்களாகிய வியஷ்டிப் பிரணவங்களுக்கும், ஓங்காரமாகிய ஸமஷ்டிப் பிரணவத்துக்கும் அவரே உரிய பொருளாய் விளங்குபவரெனவு மறிந்தின்புறுவரென்க. இவ்வுண்மை இருசமயவிளக்கத்தெளிவில் பின்வருமாறு கூறிய துணர்க.

"எடுத்த கேள்விகட் கியம்பிடா துத்தரம்வேறு
தொடுத்து வீண்கதை சொற்றனை பிரணவஞ் சிவனை
யடுத்த வுண்மையைக் காட்டினும் பல விடத்ததனல்
கடுத்தயங்கு கண்டத்தனே மகேச் சுரன் காணுய்." எனவும்,

"எற்றமாமகேச்சுரப் பெயரீசனுக்கல்லால்
சாற்றுமோவரிக்கிம்பரி னிகண்டுசான்றுரையா
தாற்றல் யாவு நீ காட்டினை வெயின் மஞ்சளான
தோற்றமேயலாலுண்டு கொல்வேறு சொற்றிடவே."

எனவும் போந்தவாறறிக. இந்தப் பிரணவவிசாரம் (பரதத்வப்பிர காசிகை) யில் விஸ்தாரமாய்ச் செய்யப்பட்டிருக்கின்றது. ஆண்டுங் கண்டுணர்க

இனி விஷ்ணுவினது மோக்ஷ கர்த்ருத்வத்தைச் சிறிது விசாரிப்பாம். "யதாசர்மவதாகாசம்" என்னுஞ் சுருதி எந்தமானவன் ஆகாசத்தைத் தோல்போலச் சுருட்ட வல்லவனோ, அவனே சிவனைச் சேவிக்காமல் ஜநந மரண துக்கங்களைத் தாண்டி மோக்ஷத்தை யடைவான் என்று போதிக்கின்றது. இதனை யநுசரித்து (இரு சமய விளக்கத்தெளிவில்) மோக்ஷ கர்த்தா விஷ்ணுவாகா ரென்பது நன்கு பரிஷ்கரிக்கப்பட்டுள்ளது. அச்செய்யுட்கள் வருமாறு:—

"ஆகாயந்தனைத் தோல்போற் சுருட்டுமவனே
சிவனை யடையாதென்றும்
போகா வெந்துயர் நீங்கிப் பொருந்துவனின்
பத்திலெனப் புகலுமே பொய்
யாகாச்சு வேதாச்சு வதரமதற் கென்பகர்வா
யணங்கே நீதான்
கூகாவென்றமு மொழி சிற்சில பேசி மழுப்பினை
நின் கொடுமை யென்னே."

"முகுந்தனெனல் வீண்கண்டாய் முத்திதர
மாட்டானை முன்னூல் காட்டா
தகந்தை மொழி கூறியதா லாயதெவ
னெங்க ளறுபத்துமூவர்
இகபரங்கள் கடந்தபர முத்தியையே யெய்தின
ரிவ் வியல்புதேரா
துகந்துரைத்தாய் மாலடியார் முத்தி பெற்றா
ரெனப்பொய்யா யொழிந்த தன்றே"

"முத்தியெனல் பிறந்திறக்குந் துயர்கடத்தலென வேதமுழங்கு நின்மால்
செத்துதித்த வியல்பாமச் சிறுதெய்வம் பிறந்திறவாச் செல்வந்தன்னைப்
பத்தர் தமக்கீயுமெனல் பொய்யாம் நின்னாழ்வார்கள் பாரிலேற்ற
முத்திபத முத்தியெனவோ ராய்மெய்ம் முத்திபெற முடியாதன்றே."

"அரியருளும்பத முத்தி தானுமவன்றனை யநிட்
டித்தாலின்மேய
பரனுதவு மன்றியுமால் பங்கயனிந்திரன் வாழ்வும்
பரிந்து போற்றிக்
கரமமுமானுடையானை யருச்சித்தேயெய்தினரக்
கடவுளே மெய்ப்

பரமென வேதங்கள் பகர்ந்திடுமுத்திதருமவனைப்
பணிவாமன்றே."

என்பவற்றாலறிந்து நமது தாசர் குணப்படக் கடவர். இதனை யிம்மட்டினிறுத்தி யேனைய விஷயங்களையுஞ் சிறிது விசாரிப்பாம்.

இவர் "வாலி ராவணன் முதலினோர் காலத்தி லிவரேன் சாந்தி செய்திலர்" என்று வினவியதொன்று. வாலி ராவணன் முதலினோருக்கு விக்னேசுவரப் பிரஸாத மில்லை யென்று இவரெங்கே கண்டார்? அவர்கள் தவத்துக் கீடாக அவர் மிதமானவருளெய்தினர். அவர்களை வெல்லத்தக்க திவ்யாநுக்ரகத்தை வாரணமுகத்தண்ணலை வந்தித்து இராமனடைந்தானென்றறிக. இதனை "வாலி ராவணற்கும் பௌண்டற்கும் நல்கிய வரமெல்லாம் பாழாச்சுதென் றுரைத்தாய்—அக்க பாலியாலரிக்கருள் பதவியுஞ் செல்வமும் பாழாச்சுதோ சொல்லாய் துற்போதனே" என்று பராங்குச மல்லைய தேவர் பிரகாசப்படுத்தியவாறு முணர்க. நிற்க.

இவர் "விருகாசுரனுக்கு அஞ்சியோட்டமெடுத்த வுருத்திரனை இவர்காவாததென்னை" எனக்கடாவியது மற்றொன்று. இதற்குச் (சிவதத்வசிந்தாமணி) யிற்போந்த மறுப்பை யீண்டெழுதுகிறோம்.

> "விருகாசுரன் கதையை மேற்கொண்டாயன்னோற்
> கருகாகமால் பெண்ணேயாகி—வருமேது
> வெல்லாந்தன் மூலவுருக் காணிலெரிப்பானவனென்
> றல்லான் மற்றேதுரையிங்கார்ந்து."
> "ஓடியது நாடகமென்றோராய் சிவனரன்
> றோடிலரேல் பொய்யாமன்றோ வுதவுங்—கேடில்வரம்
> இன்னுந் திருமாலாமேந்திழை யின்பந்திளைத்துத்
> துன்னு மோகாந்தனுயர்தோள்."

பெண்ணென்றால் பேயுமிரங்கும் என்பதை யறிந்தேயன்றோ தன்னுயிரைக் காத்துக்கொள்ளுமாறு நாராயணன் பெட்டை வடிவத்தால் வெளியாயினர்? அங்ஙனம் வந்தபோதும் அவனை யஞ்சியேயன்றோ நெருங்காது தூரமாய்விட்டனர்? பெண்ணுருவத்திலுமவனை நெருங்காமையால் அவனெங்கே லீலையாயேனுங் கையைத் தன்றலையில் வைத்துவிடப் போகிறானோ வென்று அச்சமுற்று இடுக்கண் பட்டமையே போதராநின்றது.

எனப்போந்த சமாதானங்களாலும் (சிவபாரம்யப்பிரதரிசினி பஸ்மாசுரவிஜய) த்திற் கூறியுள்ள விசேட சமாதானங்களாலும் நமது தாசர் மதம் தலையிடறிப்போயதுணர்க.

இனி "தெய்வங்கட் காதியானவன் என்றுயரை நீக்கி ரக்ஷிக்க க்கடவன், என்று யானையமுதபோது இவ்வேழமுகத்தோனெங் கோடியொளித்தனன்" என்றிவர்வினவித்தொலைத்தது மற்றொன்று. இதற்குக் (கூரேசவிஜயபங்கத்தில்) ககஉ-வது முதல் கஉ0-வது பக்கம் வரையில் சமாதானம் கூறப்பட்டிருக்கின்றது. அன்றியும்,

"மத்தக்கரியாதி மூலமென்றோதி வழுத்தியநாள்
சித்தத்திருத்தியதே வரியாகச் சிறந்திடலால்
செத்துப் பிறந்துழல் மாலடைந்தானதன் சேதிகண்டே
பித்துக்கொலோ கெடுவீரறியாது பிதற்றுவதே"

என்று காளமேகப்புலவர் கூறியருளினர். இவற்றால் யானையின் கதை யிறந்தொழிந்தது. நிற்க.

இவர் "வாணாசுரன் சண்டையில் குறுங்காலும் பெருவயிறுமு டைய கணபதி முடுகியோடினான்" என்று இழித்துரை யாடியதொ ன்று. சராசந்தனுக்குப் பலதரம் தோற்றோடியும், சாளுவயுத்தத்தில் அடிபட்டுத் தேரினடித்தட்டில் மூர்ச்சித்து வீழ்ந்தும் நொந்த(விஷ் ணுவினது) மயிரவதார மூர்த்திக்குக் கணபதி யோடினாரென்பதை எந்தவிவேகிகளோ ஒப்புவார்கள்? வெள்ளை மயிரவதாரத்துக்குப் பி ந்திய இந்தக் கறுப்புமயிரவதார மூர்த்தியை வேடன் அம்பாற்கொ ன்றான். இறந்து பிணமாகிய பின்னர் அர்ஜுனன் சுடுகாட்டில் தீமூ ட்டிக் கொளுத்தினான். தீப்பற்றி யெரிகிறபோது வெள்ளம்வந்து அந்தப்பிணம் வெந்ததும் வேகாததுமாக நதியிலடித்துக்கொண்டு போகப்பட்டது. அது இப்போதும் ஆந்தைக்கண்ணும், தேய்ந்த மே னியும், குறைந்த கையும், மிகுந்தகாலுந் தோன்றக்காணப்படும் பே ரழகை நண்பர் என்னென்று மதித்தோ எமதப்பனைக் குறுங்கா லும் பெருவயிறு முடையாரென்று தூஷித்தது? (சிவபாரம்யப்பி ரதரிசினி-பாணாசுரவிருத்தாந்தத்தில்) இவ்வுண்மை நன்கு பரிஷ்கரி க்கப்பட்டிருக்கின்றது. ஆண்டுக் கண்டுகொள்க. நிற்க.

இவர் "பிரணவத்தையும் யானையின்றலையையும் ஒத்திட்டுப் பார்க்கும்படி எந்தச்சுருதி கூறுகின்றனவோ அறியேம்" என்று ஏ ழைக்குடியை வினயினர். அவையிரண்டு மொத்திருப்பதாகச் சை வர் கூறியதை நமது தாசர் வீண்பரிகாசஞ் செய்தாரேயன்றி யொ த்திருக்க வில்லையென்று மறுத்தாரில்லை. நியாயங்காட்டி மறுத்தில ரேனும் பிரமாணங் கேட்டாராகையா லதனையும் எமது நியாயத்தை யுமீண்டு வரைவாம்.

"பூமாது தனைப்புணர்ந்த புயல்வண்ணப்
 பெருமானும் புலவர் போற்று
நாமாது தனைப்புணர்ந்த நான்முகனும்போர்
 மாது நயக்குமெண் டோட்
கோமானுந் தானே யென்றுணர்த்துதற்கே
 பிரணவகுஞ் சரமாய்த்தோன்றி
மாமாவின்முகத்தானை யுயிர்த்தானை நினைந்
 திறைஞ்சி வழுத்துவாமே."

என்பது பிரமாணம். இதில் பிரணவகுஞ்சரம் என்றது என்னை? பிரணவாகாரமாய்த் தோன்றுங் குஞ்சரவடிவம் என்பதே யன்றோ? பிரணவஸ்வரூபம் ஓங்காரமென்பது. இது கணபதிவடிவம். ஓங்காரத்தில் அகார உகார மகாரங்க ளந்தர்க்கதம். இவை பிரமனாதி மூவர்வடிவம். அகர உகர மகரங்கள் ஓங்காரத்தி னுறுப்புக்க ளாயிடுதல்போல அவற்றை யுறை விடமாகக்கொண்ட மூவரும் கணபதியினுறுப்புக்களாம். இதனையே (மும்மூர்த்திகளுந்) "தானே யென்றுணர்த்துதற்கு" என்றுமேல் வாக்கியத்திற் கூறியதுணர்க. இன்னும் பிரணவம் விநாயகஸ்வரூபம் என்பதற்குப் பிள்ளையார்சுழியே சாட்சியாம். பிள்ளையார்சுழி என்பது உலகிலொவ்வொருவரும் ஒரு விஷய மெழுதத் தொடங்கும்போது தலைப்பில் எழுதும் (உ) இந்த அடையாளமாம். இதனை "ப்ரதமம் பிந்துஸம் யுக்தம்-த்விதீயம் தண்ட முச்யதே" என்று துணிந்தனர் மேலோர். முதல் பிந்துவென்பது (0) என்னும் வட்டவடிவு. இரண்டாவது தண்டமென்பது (—) என்னுங் கோடுருவமாம். இவற்றுள், முன்னையது பிந்துவும், பின்னையது நாதமுமாம். இரண்டுஞ் சேர்ந்ததே பிள்ளையார் சுழியாம். பிரணவமானது அகார உகார மகார பிந்து நாதவடிவமென்பது கணபத்யுபநிஷத்தால் முதலிலேதானே காட்டினும். இப்படி யெல்லாப் படியாலுமுணர்ந் தனுபவிக்கத்தக்க பிரணவகுஞ்சர ஸ்வரூபனிடம் நமது தாசருக்குண்டான விபரீதம் ஜந்மாந்தர பாபபலமென்னுது வேறுயாதென்பேம்! பிரணவம் ஐந்துறுப்புடையது. பிள்ளையார்சுழி இரண்டுறுப் பினைக்கொண்டு சங்கிரகமாகச் சூசித்து நிற்கின்றது.

இதனையின்னுங் கொஞ்சம் கூறுகின்றேம். கணபதிக்கு அநேக அவசரங்களுண்டு. அவற்றுள், சிவனரது அநாதிசித்தமான பிரணவ குஞ்சர கோலமொன்று. சிவனரது கண்டத்தில் கணபதி

யுதித்ததொன்று. சிந்தாமணி விநாயகர்-வக்ரதுண்ட விநாயகர்-கஜாநநவிநாயகர்-கணபதி விநாயகர்-மகோற்கட விநாயகர் முதலிய திவ்ய நாமங்களா லாவிர்ப்பவித்துத் திருவிளையாடல் புரிந்தகோலங்கள்பல. இவற்றுள், கணபதி விநாயகர் சரிதம்வருமாறு:—ஸ்ரீசிவபெருமான் உமாதேவியாரோடு ஸ்ரீகைலாசத்திலுள்ள உத்யான வனத்தில் வேடிக்கையா யோர்போ துலாவி வந்தனர். அப்போதங்குள்ள சித்ரமண்டபமெய்தி அதிலெழுதி யிருக்கும் சப்தகோடி மஹாமந்திரங்களையும், அத்தனைக்கும் ஆதியும் ஆதாரமுமாகிய பிரணவதாரக மந்திரத்தையும் பார்க்கையில், பிரணவாகாரமாகிய ஓங்காரவடிவத்தினுள் அதன்பொருளாகிய சிவசத்திக ளிருவரும் யானைவடிவங்களா யொன்றுகூடி யிருத்தலாகிய காட்சியுருவ மமைக்கப்பட்டிருந்தது.

இதனையே ஸ்ரீசேக்கிழார் பெருமான் "பொருப்பரையன் மடப்பிடியி னுடன்புணருஞ் சிவக்களிற்றை" என்று கூறியுலகை யுய்வித்தனர். இவ்வதிசயத்தைக் கண்ணுற்ற அம்மை சுவாமியைப் பார்த்து இது என்னையென்று வினவினர். சுவாமி அம்மையைநோக்கிப் பெண்ணே! நீ அந்தப்பெண்யானையைப் பாரென்று கட்டளையிட்டுத் தான் ஆண்யானையைப் பார்த்தனர். உடனே அவ்விரண்டு யானைகளும் புணர்ந்த கோலமாகச் சகளீகரித்தன. அவற்றினிடையில் வாரணமுகத் தண்ணல் வந்துதித்தனர். பிரணவ மந்திரஸ்வரூபி தானென்பது வெளிப்படையாகத் தோன்றவேயன்றோ பிரணவாகாரமாகிய முகத்தையுடைய யானையாக எம்பிரான் சக்தியோடு சகளீகரித்து யானைமுகப்பிள்ளையாரைத் தந்தருளினர். இதனால், வாரண முகத்தண்ணலாரது அருட்கோலம் சிவனாரது (வெளிப்படையான) பிரணவஸ்வரூபமென்பது இனிது சாதிக்கப்பட்டது. மந்திர ராஜமாகிய பிரணவக்காட்சி வடிவினராய்க் கணநாதர் விளங்குஞ் சத்தியத்தைப் போதிக்கவே "ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி" என்றுவேதம் இரட்டித்துக் கூறியது. பிரஸந்நவதனமென்பதும் இந்தப்பொருளிலேயே பரிவஸாநமெய்திய துணர்க. பிரஸந்நவதனமே பிரணவரூப மென்பதும் ஆண்டறியக் கிடந்ததொன்று. இவ்வுண்மைகளெல்லா முள்ளடங்கி விளங்குமாறு ஓங்காரத்தையும், கஜாநநத்தையு மொத்துப் பார்க்கும்படி ஏழைக்குடியா ரெழுதியதை நமது தாசரறிந்துய்தற்கு அவரதுபாவம் வழிவிடாமையால் வீண்வாதங்கூறி விழலராயினரென்க. நிற்க.

இந்தத் தாசருக்குத்துணைபோன "புதுவைவிகடன்" என்பவரொருவரு மிவ்விஷயத்திற் சிறிது கையைக்காட்டினராகையால் அனையும் ஈண்டுவிசாரித்து ஒழிப்பாம்.

இவர் "பிரணவரூபம் என்பது பிரணவப்பொருளாக விருப்பவர் என்பதா? அல்லது பிரணவம்போலும் உருவினையுடையவ ரென்பதா?" என வாசங்கித்து, "பிரணவம் என்பது ஜீவபரமாத்மாக்களின் உள்ளபடியே விளக்கும் மந்திரமாகக் கொள்ளப்படாது. ஒருவித ரேகையாகவன்றோ கொள்ளப்படவேண்டும்? இவர் காட்டிய மேற்படி எழுத்துப்போல ஆனைத்தலையிருக்கின்றதே. அதுபோலவன்றோ பிள்ளையார்தலையு மிருக்கிறதாக வழங்கப்படுகின்றது. ஆதலால் பிரணவரூபியென்பது மிருகஜாதியிலொன்றாகிய யானைமுகமே யென்பது ஸ்வாஸமாகின்றது. இவர் சொல்லியபடி ஈறுகெட்ட பிரணவம் யானைமுகம்போலுமேயொழிய முழுப்பிரணவம் அங்ஙனமாகாதன்றோ?" என்று மிகுதிப்பிரசங்கத்தி லிறங்கியுள்ளம் வெதும்பினர். அன்றியும், இந்துமதத்தை யநுசரிக்கிறவர்கள் பல தேசங்களில் பலபாஷைபேசி வருகிறார்கள். திராவிடம் யாவருக்கும் பொதுவாகுமா? அது தேவபாஷையா? தேவபாஷை எழுதப்பட்டுள்ள எழுத்துக்குத் தேவநாகரி யென்றுபெயர் வழங்கி வருகிறதே. இப்போது வாதமெல்லாம் தமிழ் (ஓ) என்பது பிரணவமென்று சாதிப்பதேயன்றோ? அங்ஙனமாயின், தெலுங்கு (ஓ) எழுத்துப் பிரணவப்பிள்ளையார் யாவர்? கன்னட (ஓ) எழுத்துப்பிரணவப்பிள்ளையார்யாவர்? மலையாள (ஓ) எழுத்துப் பிரணவப்பிள்ளையார் யாவர்? என்று விகடம் பேசித்தனது விகடப் பெயரைக்காத்துகொண்டார்.

இவரது தெளிவின்மையை யீண்டுச்சிறிது வெளிப்படுத்துவாம். இவர் முதல் "பிரணவரூபம் என்பது பிரணவப்பொருளாக விருப்பவர் என்பதா" என்று கடாயினரன்றோ? இப்படியுமொருவர் கொள்கையிருக்குமா? ரூபம் பொருளாவதும், பொருள் ரூபமாவதும் யாங்ஙனம்? இவரது விபரீதத்தை யேழைக்குடியார் மேலேற்றி வினயது சர்வாஸங்கதமாம். இனியிவர் "பிரணவரூபம் என்பது பிரணவம்போலும் உருவினையுடையவர் என்பதா?" என்று இரண்டாவது கேள்விகேட்டாரன்றோ? இந்தக்கேள்வியும் நிஷ்பலமானதாம். வெள்ளையாய் விளங்குவதை யாசங்கித்தது அகந்தையின் பயனேயாம். அன்றியும், இவரெடுத்துக்கொண்ட இரண்டு பக்ஷங்களி

லொன்று எதிரிமதமாயிருப்பதொழிய இரண்டு மிருக்கமாட்டா. ஏனே இந்த விகடரிரண்டையு மெதிரிமதமாகக்கொண்டு வினவினர்? இவரது கல்வியின் குறைவே இவரை வீண்கேள்விகளி னுழைந்து மானங்கெடச்செய்ததென்க. இவர் கல்வியறிவில்லாதவ ரென்பதை யின்னுந் தெரிவிப்பாம். "பிரணவம் என்பது ஜீவபரமாத்மாக்களின் உள்ளபடியே விளக்கும் மந்திரமாகக்கொள்ளப்படாது. ஒருவித ரேகையாகவன்றோ கொள்ளப்படவேண்டும்?" என்று இவர்கடாயினரன்றோ? இதில் ஜீவபரமாத்மாக்களை விளக்கும் மந்திரம் என்று கூறுவது தெளிவாம். இவர் "ஜீவபரமாத்மாக்களின் உள்ளபடியே விளக்கும்மந்திரம்" என்றது குழப்பமாம். அன்றியும், "பிரணவம் மந்திரமாகக்கொள்ளப்படாது" என்று இவரெழுதியது பிரணவ நிந்தையாம். இவர்மதம்போலச் சொல்லவேண்டுமாயின், பிரணவரேகை மந்திரமாகக் கொள்ளப்படாது என்று எழுதி விளக்கவேண்டும். இவ்வாறு விளக்கவறியாத புதுவைப்பண்டிதர் ஏழைக்குடியாரைப் படிப்பில்லாதவரென்று பரிகசித்தது தன் குற்றங்காணுத சண்டனே டினப்பட்டதனுலென்க. ஏழைக்குடிக்கு ஸம்ஸ்க்ருதம் தெரியாது என்றதே யொழியத் தமிழ்தெரியாது என்றுயாம் சொல்லவில்லையே யெனின், ஸம்ஸ்க்ருத வித்வானுக வெளிப்பட்ட இவர் ஸம்ஸ்க்ருத இலக்கணப்பிழைகளை யெடுத்துக்காட்டுவதொழிந்து, "வியங்கோள் வினைமுற்று-வினையாலணையும் பெயர்-ஆறும் வேற்றுமைப்பன்மைப்பொருள்-பண்புப்பொருள்" என்றுதமிழிலக்கண வார்த்தைகளை வரிசையாகக் கோர்த்து தமிழிலக்கணத்திலும் தான் புலி என்று காட்டிக்கொண்டவாறென்னை? சமயவாதத்திலிறங்கிய இவர் எதிரியைக் கல்வியில்லாதவரென்று தூஷித்தது தமக்குத்தோல்வித்தான மென்றறிந்திலர்போலும். யாமிப்போது இவரது கல்வியின்குறைவை யெடுத்துக்காட்டியதோ வெனின், இவர் சொன்னதன் மேற் சொன்னதேயன்றி யாமே முந்திய தின்றும். இதனை யிவ்வளவினிறுத்தி இவரது ஏனையாபாசங்களையுஞ் சிறிது விளக்குவாம்.

இவர் "பிரணவம் மந்திரமாகக் கொள்ளப்படாது" என்றூர் கொள்ளப்படமாட்டாது என்று எழுதுவது மரபாம். அல்லது பிரணவம் மந்திரமாகாது என்று கூறுவது ஒழுங்காம். கொள்ளப்படாது என்று கூறுவதாயின், பிரணவத்தை என்று விரித்தல் மரபாம். நமதன்பர் கைச்சரக்கைச் சோதிக்கச் சோதிக்க யோக்யதை குறைவுறுகின்றது. இனிப்பிரணவத்தை மந்திர ராஜம் என்று உப

நிஷத்துக்கள் கோஷிக்கின்றன. இதற்கு விரோதமாக அது மந்திரமாகாது என்றிவர் தூற்றியது விநாயகரிடம் வைத்த துவேஷத்தின் பயனேயாம். இவரது கருத்து ஓம் என்னும் ஒலியே பிரணவமென்பதாம். ரேகை பலபாஷைகளில் பலவிதமாய் விளங்கலால் அது முக்யமாகாது என்பதாம். ரேகை அமுக்யமாயின் ஸ்ரீசக்ரம் ஜீவிக்குமாறு யாங்ஙனம்? எழுத்துக்களைக் கோணங்களி லடைத்து யந்திரப்பிரதிஷ்டை செய்வதற்கு யாதுகதி? ஸ்ரீபஞ்சாக்ஷர ஷடாக்ஷர அஷ்டாக்ஷரங்களைத் தாம்பிரத் தகடுகளிலெழுதிப் பெரியோர் பூசித்துச் சித்திகளெய்தி இன்புறுவது என்னை? வேதவரம்பினின்ற சமயிகள் பலபாஷையினரா யிருப்பினும் தததம்பாஷைகளிற் போந்த (ஓ) என்பதை மந்திரமாகக் கொள்ளாமல் தமிழ் (ஓ) வையே மந்திரமாகக்கொண்டு வந்திப்பரென்க. மேடம்-பிளவாட்ஸ்கி முதலிய அன்னிய நாட்டு வைதிகச் சீமாட்டிகளுமன்றோ தமது இங்கிலீஷ் புத்தகங்களில் தமிழ் ஓம் அடையாளமிட்டுப் பிரணவத்தை வந்தித்து வாழ்கின்றனர்? இவ்வுண்மையுணராத நமது விகடர் தமிழ்ப்பிரணவத்தை அது விநாயகரது முகம்போலிருப்பது நோக்கி மிருகஜாதியிலொன்று போலுமென்று இழிவுரைத்தனர்.

இவரது நாராயணர் பன்றி-சிங்கம்-குதிரை முதலிய முகங்களைத் தாங்கியிருப்பது நோக்கிப் பரதத்வப்பொருள் மிருகஜாதியே போலும் என்று இவரையிடிப்பார்க்கு இவர் யாதுவிடை கூறுவர்? இவரிம்மட்டி லமையாமல் யானை முகத்தைப் பிரணவமாகக்கொண்டால், அது ஈறுகெட்ட பிரணவமாகுமே யொழிய முழுப்பிரணவமாகாதென்று தருக்கினர். இவரீறுகெட்ட தென்பது யானைமுகத்தில் மகாரம் கூடியிருக்கவில்லை யென்பதேயாம். இவர் காட்டானையை யுற்றுநோக்கி யாசங்கித்தார்போலும். முத்தர்வாழும் வீட்டானையினிடத்தில் முழுப்பிரணவ வுருவங் கண்டிலமென்று வெதும்பார் மேலோரென்க. அதவா காட்டானையினிட மிவர் விரும்பினும், அதன் தும்பிக்கையைச் சிறிது மடக்கி மடித்து அதுவிளையாடின், அப்போது அதனிடத்தில் மகரம் வெளிப்படாமற் போகாதென்க. (ஓம்) என்னுமிந்த அடையாளம் தும்பிக்கையைமடித்து விளையாடும் யானையினிடம் காணலாமென்க. இனி யீறுகெட்ட பிரணவரூபமாகவே யானைமுகம் விளங்கட்டும். அதனாலும் எமது பட்சம் கெடுமாறில்லை யறிக. எங்ஙனமெனின், வைகுண்டபதியினது அடையாளங்கள் இராம கிருஷ்ணாதிக ளிடங்காணாமையால், இவர்களை அரை

விஷ்ணு-கால்விஷ்ணு வென்று இவர் கழித்திடின், யானைமுகம் மூப்பிரணவமாகாதென்று இவர்பேசிய கொடுமைக்குக் கௌரவமுண்டாகலாமென்க. நிற்க.

இவர் இந்துமதஸ்தர் பலபாஷைகளை யுடையவரென்றார். இந்து மதமெனவொரு மதமுண்டோ? சைவ ஸ்மார்த்த வைஷ்ணவ மாத்வர்களையெல்லா மொன்றுசேர்த்து இந்துக்களென்று அழைக்கிறார். இவ்வாறு கிறிஸ்தவர்கள் வழங்குவார்கள். எந்தப்பூர்வ வைதிகநூல்களிலும் இந்தப் பிரயோகங்கிடையாது. வைதிகநூல்களிற் பழகாத சாமானியர்களது வழக்கேபற்றி வாய்மலர்ந்தார் போலும் நம் விகடர்

இவரது வன்கண்மை மிகப்பெரிது. இல்லையாயின், "திராவிடம் யாவருக்கும் பொதுவாகுமா" என்று பேசமகிழார். திராவிட ஓங்காரத்தையே யாவருங் கையாண்டு வருவதை இவருணர்ந்திலர். இனியாவது விசாரித்து நாணி நான்று கொள்ளட்டும். நிற்க. இவர் "திராவிடம் தேவபாஷையா" என்று ஒரு பெரியகேள்வி கேட்டுவிட்டார். தேவபாஷைக்குக் கொம்புமுளைத்திருக்கிறதோ? தேவபாஷையென்றால் இவரது கருத்துயாது? தேவர்கள் பேசும் பாஷையென்பது போலும். இருந்தாலுமிருக்கட்டும். தமிழ் ஆரிஷமெனனுஞ் சிறப்புப் பெற்றிருக்கின்றது. ஆரிஷமென்றால் இருடிபாஷையென்பதாம். அகஸ்திய ரிஷி செய்த பாஷையென்று சிலர் சொல்லுகின்றனர். அகஸ்திய முனிவருக்குச் சிவபெருமா னுபதேசித்தருளியதை அம்முனிவேந்தர் பின்னருலகில் விர்த்திசெய்தாரென் றறியக்கடவர். இப்படிப்போலவே கீர்வாணத்தைப் பாணினி முனிவருக்குபதேசித்தருளினர் சிவபெருமான். பின்ன ரம்முனிவரதனை யுலகில் விர்த்திசெய்தனர். இதனால், இரண்டு பாஷைகளும் ஸமநிலையின வென்பது அறிஞர்துணிபாம். ஆயினும், ஈண்டுப்பிரஸ்தாபித்த முனிவரிருவருள், அகஸ்தியபகவான் மிகச்சிரேஷ்டராகையால் அவருடைய சம்பந்தத்தைப் பெற்று ஆரிஷம் என்னும் பிரசித்தியடைந்த தமிழினும் தேவபாஷை அவ்வளவு சிறப்புடைத்தன்றாம். தேவர்கள் கீர்வாணமே பேசுகிறார்களென்பதற்குத்தான் யாதுபிரமாணம்? அப்படியில்லையாயின், அதற்குத் தேவபாஷையென்று பெயர் வழங்குவது யாதுபற்றி? தேவர்கள் இருடியரது சாபவலிக்குட்பட்டு அடங்கினவர்களாகையால் ஆரிஷமாகிய தமிழுக்குத் தேவபாஷையாகிய கீர்வாணம் அடங்கிய தென்றே யறியக்கடவர். இந்திரனுக்கு அக

ஸ்தியர் சாபமிட்டதும், விஷ்ணுவுக்குப் பிருகு சாபமிட்டதும் புராணங்களிற் பிரசித்தியாகையால், இதனை யுய்த்துணர்ந்தார் தேவபாஷையைக் கொண்டாடி மகிழாரென்க.

இனியாம் தமிழைக் கைலாஸ பாஷையென்று துதித்துவாழ்வாம். ஸ்ரீ கைலாசத்தில் ஆதியுலா-பொன்வண்ணத்தந்தாதி-நொடித்தான்மலைத் திருப்பதிக முதலியன பிரகாசப்படுத்தப் பட்டன. ஸ்ரீ சிவபெருமான் பாணபத்திரருக்கும், தருமிக்கும், பெற்றான் சாம்பானுக்கும் தமிழ்ப் பாடல்களெழுதிக் கொடுத்தருளினர். சமயாசாரியர் நால்வர்கள்-காரைக்காலம்மையார் முதலினோர்-காரிமாறனாதியோர் தமிழ்ப்பாடல்களையே பாடித் தெய்வத்தை யுவப்பித்தனர். முதற் சங்கம்-இடைச்சங்கம் - கடைச்சங்கங்களைத் தாபித்துச் சிவபெருமானும், விஷ்ணு முதலினோரும், முனிவர்களும், மற்றவர்களும் தமிழையே வளர்த்து வந்தார்கள். ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ள நாற்பத்தொன்பது எழுத்துக்களும் நக்கீராதி வித்வான்களாகப் பிறந்து தமிழைக்கற்றுப் பெருமையடைந்தன. இவற்றை யுணர்ந்திடாது நமது விகடர் தமிழ் தேவபாஷையல்லாமையால் குடிமுழுகிப்போய் விட்டதாகத் துடித்தது அவருக்கே துன்பமாய் முடிந்ததறிக.

"தொண்டர் நாதனைத் தூதிடைவிடுத்தது முதலை
யுண்டபாலனை யழைத்தது மெலும்பு பெண்ணுருவாக்
கண்டதும் மறைக்கதவினை யடைத்ததுங் கன்னித்
தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்"

என்பதனையு மறிந்து அடங்கி நமதன்பரின்புறக்கடவர். நிற்க.

இவர் "தேவபாஷையெழுதப்பட்டுள்ள எழுத்துத் தேவநாகரி என்று பெயர்வழங்கி வருகிறதே" என்று மனப்பால் குடித்து மாழ்கினாரன்றோ? இதுவும் அஸங்கதமாம். தேவநாகரி எழுத்தை யாவருண்டாக்கினவர்? தேவபாஷைக் கென்றே யொருவித எழுத்துத் தேவநாகரிப் பெயரா லுண்டாயிருக்கும்போது, அத்தேவநாகரியிலேயே தேவபாஷையை யாவருங்கற்று வெளிவராமல் தெலுங்கு—கன்னடம்- மலையாளம்-கிரந்த முதலிய பலபல தேச வெழுத்துக்களிலெல்லா மெழுதி அப்பயஸித்துவருவது என்னை ? இவற்றோடொன்றாயொதுங்குந் தேவநாகரியை அளவுக்கதிகமாக விகடர் கூறியது விவேகிகளுக்கு வெகு துச்சமாம். சங்கரன் என்னுமொரு வேதியர் விர்த்திசெய்த மதம் சங்கரமதம் அல்லது சங்கராசாரியர்மதம் என்று

பிரசித்தி யடைந்திருப்பதுபோலத் தேவன் என்னும் ஒருபண்டி
த ருண்டுபண்ணிய வெழுத்துத் தேவநாகரியென்று பிரசித்தியடை
ந்ததெனவறிக. சங்கரமதம் சிவனுருடைய மதமாகாததுபோலத்
தேவநாகரி தேவர்களுடைய நாகரியாகமாட்டாதென்பது சித்தமெ
ன்றுணர்க. இந்தத்தேவநாகரி மஹாராஷ்ட்ர வெழுத்தின்றிரிவாம்.
கீர்வாணபாஷைக்கு எழுத்துக்கிடையவே கிடையாது. அந்தப்பா
ஷையிலுள்ள வேதத்துக்கு எழுதாக்கிளவியென்று பிரஸித்த நாம
முண்டா யிருத்தல் யாவருமறிவார்கள். மேற்கூறிய வெழுத்துக்க
ளில் கிரந்தவெழுத்தென்பது தமிழின்றிரிவாம். இந்தக்கிரந்த எழு
த்து முழுதும் ஏறக்குறையத் தமிழ் எழுத்துப்போலவே யிருக்கும்.
இந்த எழுத்திலுள்ள (ஓ)வும், தமிழெழுத்திலுள்ள (ஓ)வும் ஒன்றே
யாம். இதனல் (ஓ) என்பது தமிழெழுத்தென்றே தீர்மான மாயிற்
று. தமிழ் கீர்வாணம் நீங்கலாக மற்றப்பாஷைகள் அவ்விரண்டு பா
ஷைளிலிருந்து பிறந்தனவே யாகையால் அந்தப்பாஷைகளும், அவ
ற்றிற்போந்த (ஓ) வெழுத்துக்களும் அநாதி சித்தமாயினவல்ல. இங்
ஙனமாகவும், இடையேதோன்றிய பிராகிருத பாஷாந்தர்க்கமான ப
லஜாதி (ஓ) எழுத்துக்களைச் சுட்டித்தெலுங்கு (ஓ) எழுத்துப் பி
ரணவப் பிள்ளையார் யாவர்? மலையாள (ஓ) எழுத்துப் பிரணவப்பி
ள்ளையார் யாவர்? என்பனவாதி விகடவினுக்களை யெழுப்பியஇவ
ரது அகந்தை விலாசத்துக்கு ஊரிலுள்ள நாகதாரிப்புதர்களை யெல்
லாம் யாம் இனுமாகவிடுத்தாமென்க.

ஈண்டு யாம் முக்யமாக வெடுத்துக்கொண்ட பாஷைகளிரண்
டில் தமிழுக்குமாத்திரமே வரிவடிவும் ஒலிவடிவு மொப்பியிருக்கின்
றனர் பெரியோர். கீர்வாணத்துக்கு ஒலிவடிவு மாத்திரமேயன்றி வரி
வடிவுகிடையாது. அநாதி வரிவடிவோடு கூடியபாஷை தமிழொன்
றே யாகையால், அதிற்றுனே ஓங்காரமாகிய வரிவடிவு நிலைபெறுயின
துணர்க. இதனல், ஓங்காரவாச்யரென்று ஸ்ரீ விநாயகக்கடவுளைத்
துதிப்பது தமிழாதரவுபற்றியே யென்று நமதன்பரறிந் துய்திபெ
றக்கடவர். இத்தமிழ்ப்பாஷையி லிருந்தே கீர்வாணம் பிறந்ததாம்.
எங்ஙனமெனின், தமிழுக்குச் சிறப்பெழுத்து, எ-ஒ-ழ-ற-ன, என
வைந்தாம். இச்சிறப்பெழுத்து ஐந்தனுள், எ-என்பது அகர இகர
ங்கள் சேர்ந்துண்டானதும், ஒ-என்பது அகர உகரங்கள் சேர்ந்து
ண்டானதுமாம். எ-ஒ-என்னுந் தமிழெழுத்துக்களுக்கு ஆதாரமா
கிய எழுத்துக்களுந் தமிழேயாகத் தட்டில்லையாகையால், அகர-இக

ர-உகரங்களையும் யாம் தமிழென்றே துணிந்தாம். குறில்கள் தமிழா னபோது இவற்றினது நெடில்களுந் தமிழென்பதி லாசங்கையுண் டோ? இவ்வாறு விசாரித்துணர்வார்க்கு அ-ஆ-இ-ஈ-உ-ஊ-எ-ஏ-ஐ ஒ-ஓ-ஔ-என்னும் எழுத்துக்கள்யாவுமே தமிழ் என்பது இனிது வி ளங்காமற்போகாது. இவற்றுள், ஐ-ஔ என்பவைகளைச் சந்தியக்ஷ ரமென்பர் வடநூலார். அ - இ- சேர்ந்து ஐயும், அ-உ- சேர்ந்து ஔவுமானதாக அன்னோர் கூறுவர். இவற்றால், எமது தமிழுக்கே பிராசுரிய மோங்கியவாறு தெளிக.

கீர்வாணபாஷையில் ஒகரமில்லையாயினும் ஓகாரமிருப்பது திண் ணமாகையால், ஓகாரம் தமிழாதலிழுக்குமெனின, யாமிப்போது பேசியது வரிவடிவைப்பற்றியேயன்றி ஒலிவடிவைப்பற்றியன்று. த மிழ் ஓவையே கீர்வாண ஓவாக்கிக்கொண்டதன்றி வேறில்லை. இத னால், தமிழ் ஓவே பிரணவமென்றது ஸ்திரமாயிற்று. இனிக்கீர்வாண ஓவினது ஒலிவடிவுந் தமிழிலிருந்தே பிறந்தமையை நிரூபித்திடு வாம். கீர்வாணத்தில் ஓ எழுத்து இருந்தாலும் அதுகுறில் ஒ வினது விகாரமாகுமன்றித் தானே மூலத்ததனிமுதலாகாது. அகரம் ஆ காரமாயினதுபோல ஒகாரம் ஓகாரமாயினதுசத்தியம். அகரமின்றி ஆகாரமில்லை. ஒகரமின்றி ஓகாரமில்லை. ஒகரம் கீர்வாணத்திலில்லை. கீர்வாணத்திலில்லாத ஒகரத்தினீட்சி (ஓ) கீர்வாணமாவதெப்படி? தமிழ் ஒகரமே ஓகாரமாயினமையால், ஓங்காரம்தமிழென்றவெமது சித்தாந்தம் நிலைபெறுயினதுணர்க. இன்னுமிதனை வற்புறுத்துவாம். பிரணவமானது அகார உகார மகாரங்களாலாகியது என்பதை மறு ப்பாரில்லை. அகார உகாரங்கள்சேர்ந்தால் ஓ-என்பதேயன்றி ஓ-என் று ஒலிக்காது. மேலே ஓ என்னுமெழுத்தின் பிறப்பையாம் தெரிவி த்தபடியே இந்தப்பிரணவமும் வெளிப்படுத்தியவாறுணர்க அ-உ-ம் என்பவற்றாலாகியது பிரணவமென்னுமல் ஓ என்னுந் தனிமுதலாக த் தானேயுள்ளது என்று சுருதி போதிக்குமானால் யாம் தமிழைக் குறுக்கே கொண்டுவந்து போட்டு நமது விகடரை நெஞ்சுலரச்செ ய்ய வாவசியகமிராது. இப்படியெல்லாம் வருமென்று அறிந்தால் வீ ணே கரிபூசிக்கொள்ள விதியாவென்று ஒதுங்கியிருப்பர். இனியேனு ம் எமது கரிமுகத்தண்ணலை வந்தித்துத் தனது அபராதங்கள் க்ஷமி க்கப்பெற்று உய்யும்வழி தேடுவாராக. விரிக்கிற் பெருகும். நிற்க.

இவர் பிரணவத்தினது ஒலிவடிவேயன்றி வரிவடிவு அமுக்ய மென்பது போதர அது ஒரு ரேகையென்று சாமானியமாய்க் கழி

த்தாரன்றோ? இவருக்கது தமிழாயிருந்தபடியால் சாமானியமாயி னதேயன்றி இவர் மெச்சிய நாகரத்திலிருந்தால் அப்போது தெய் வமாய்த் திரும்புமென்க. இல்லையாயின், "திராவிடம் தேவபாஷை யா?" என்று இவர் கடாவியதன் பொருளென்னை? யாம் விளக்கி யவாய்மையால் தமிழ் பரமசிவபாஷையாய் முடிந்தமையாலும், எல் லாப்பாஷையினரும் வந்திக்கும் ஓங்காரத்தைத் தனதங்கமாகப் பெ ற்றமையாலும் அதிற்போந்த பிரணவரூபம் நமது விகடதாசர் தூ ஷிக்குந் துர்ப்பலஸ்திதியை யடைந்ததின்றெனவறிக. பிரணவத்து க்கு வரிவடிவு அல்லது ரூபமில்லையானால் அதனைப்பிரதிஷ்டித்து அ ர்ச்சனையாதிகளால் ஸாதுக்களாராதித்தல் கூடாது. பிரணவம் ஓங் காரமஹேசுவர க்ஷேத்திரத்தில் சிவாராதனைபுரிந்ததாகப் புராணங் கள் கூறியதும் பொய்யாம். இவரது தெய்வமாகிய விஷ்ணுவைத் தி ருக்கோயில்களிற் பிரதிஷ்டித்துப் பூசிக்கும் அன்பர்கள் அங்கேகா ணும் சுவாமியுருவை இது ஒரு கல்லென்று சாமானியமாய்க் கருது வார்களோ? சுவாமியென்னுஞ்சொல்லேமுக்யம், இந்தக்கல்லுருவம் அமுக்யம் என்னும்போதத்தை இனியிவரிடங்கற்று உலகம் கடைத் தேற வேண்டியதுதான். இன்னும் வைகுண்டபதியாகிய விஷ்ணுவி னது திருவுருவத்தையு மிவர் திலதர்ப்பணம் பண்ணவேண்டியதே. வைஷ்ணவ சித்தாந்தத்தில் நாரயணருக்கு ரூபமேமுக்யம். அந்தரூ பம் நாராயணரது சைதன்யத்துக்கு வேறானது. இதனால், நாராய ணராகாத கரியதிருமேனியை இவர்கட்டி யழுவதிலொரு பயனுமின் றும். இவரதுபோதத்தைத் தழுவி யாமிவ்வாறு கூறுவதொழிய எம து ஸ்வமதம் அப்படியன்றும். இவைகளையோசிக்கின், நமது விகட தாசர் பிரணவத்தினுருவை ஸாமானியரேகை யென்றொதுக்கிப் பரி பவமெய்தார். எமதுதமிழுருவாகிய பிரணவாதிக்ய மின்னுமிவருண ரவேண்டின், திருக்கோயில்களில் சுவாமியெழுந்தருளும் பிரணவபீ டத்தைப்பார்ப்பாராக. பிரணவபீடமென்பது பிரபையோடு கூடிய ஆசனமாம். பிரபைக்குள்ளாகவன்றோ சுவாமியெழுந்தருளி யிருப் பார்? இந்தப்பிரபையைத் திருவாசியென்று கூறுவர் தெரிந்தோர். இது தமிழா வேறா? இவர் யோசிக்கட்டும். இவ்வாறுபிரணவத்தை விசாரிக்கும் ஸாதுக்கள் நமது ஏழைக்குடியார் கஜாநநமூர்த்தியை ப் பிரணவப் பொருளென்று வந்தித்த சத்தியத்தைச் சிரஸாவகித் துச் சிந்தைமகிழ்ந் தின்புறுவரென்க. விரிக்கிற் பெருகும். நிற்க.

இவர் "ஞானனந்த மயம் தேவம்-நிர்மலஸ்படிகாக்ருதிம் - ஆதாரம் ஸர்வவித்யானும்-ஹயக்ரீவ முபாஸ்மஹே" என்றவொரு சாமானிய சுலோகத்தையெழுதி, இதில், "ஸ்படிகாக்ருதிம்" என்றிருத்தலால் "சசிவர்ணம்" அல்லது சந்திரவர்ணம் இவர்களது குதிரைமுக விஷ்ணுவுக்கே சொந்தமென்று லாலிபாடினர். அதற்கு ஔவையார் "துப்பார்திருமேனித் தும்பிக்கையான்" என்று கூறினமையால், பிரமசாரியான விக்னேசுரருடுப்பது கிருஷ்ணஜினமென்று பெறப்படுகிறதெனவும், அதனல் சசிவர்ணமென்பது விநாயகரைப் பொருந்தமாட்டாதெனவும் மங்களமும்பாடி மகிழ்ந்தார்.

இவர்காட்டிய சுலோகத்தில், "சுக்லாம்பரதரம்-விஷ்ணும்-சதுர்ப்புஜம்-ப்ரஸந்நவதனம்-விக்னேபசாந்தயே" என்பவைகளுக்கு ஒரு விமோசனமுங் காணேம். சசிவர்ணத்துக்குமாத்திரம் "ஸ்படிகாக்ருதிம்" என்பதை யொப்படைத்தார். ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி யுபநிஷத்தில் "ஸ்படிகரஜிதவர்ணம்" என்று தொடங்சி "தக்ஷிணமூர்த்திமீடே" என்று துதித்திருப்ப திவருணரார். ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி ஸந்நிதியில் ஹயக்ரீவர் வெளுத்திருப்பது உசிதம் பெறுதென்க. விஷ்ணுவுக்குப் பிராகிருத சரீரத்தை வேதமொப்பியதால், அப்பிராக்ருதமாகிய நிர்மலத்வாதிகள் அவருக்குபசாரமேயாம். அந்தச்சுலோகத்தில் "ஸர்வவித்யாநாம்" என்றதும் கள்ளிக்கொம்புக்கு வெள்ளிப்பூண் கட்டியதுபோலாம். சுருதி "ஈசாநஸ்ஸர்வவித்யாநாம்" என்று சிவபரஞ்சுடரையே கூறி, "சிவோமே அஸ்து ஸதாசிவோம்" என்று உபசாந்தி யடைந்தது. இவற்றைத்தெளிந்துய்யும் புண்ணியம் போதாத நமது இராமதாசர் "அந்த ஹயக்ரீவருக்கன்றிச் சிவன் முதலாயதேவர்களுள் ஒருவர்க்கேனும் ஸ்படிகம்போன்ற வெண்ணிறம் கிடையாது" என்று அசத்தியம்பேசியழிந்தது வெகுபரிதாபம். அன்றியும் சிவன் வெள்ளைநிறம்-விஷ்ணுகறுப்புநிறம்-பிரம்ஹா சிவப்புநிறம் என்பது யாருமறிந்த விஷயம். இவ்வளவி லமையாமல் "துல்லியமாகிய வெள்ளையாடையும், சதுர்ப்புஜங்களும்" அந்த ஹயக்ரீவருக்கே சொந்தம் என்று இவர் கூறிமகிழ்ந்தார். சதுர்ப்புஜம் தேவர்களுக்குப்பொது. இவர்பிரஸ்தாபித்த வெள்ளையாடைக்கு என்னபிரமாணங்காட்டினர்? விகடரது அநாமத்துச் சுலோகத்திலாவது ஆதரவுகண்டாரா? ஒன்றுமில்லாமலே செருக்கு மீறி ஸ்ரீகணநாதருக்கு வெள்ளைவஸ்திரமில்லையென்று அகந்தைபேசியது விவேகமா? ஸ்ரீ விநாயகக்கடவுளது அஷ்டோத்தரத்தில், ௬௬-வது திரு

மந்திரம் "ஓம் ஸ்வேதபரிதாநாயநம:" என்பது. உஎ-வது மந்திரம் "ஓம் சுப்ரப்ரியாயநம:" ஈண்டுச்சுப்ரம் என்றது வெள்ளையான பல பொருள்களைச் சுட்டுமாயினும், வெள்ளைவஸ்திரத்தையே கருதுவர்மேலோர். அன்றியும், நக்கீரதேவரருளிய விநாயகரகவலில், "மின்னுமெனவே விளங்குபட்டழகும்" என்று கூறப்பட்டிருக்கின்றது. மின்னல் வெண்ணிறம். அதுபோல விளங்கும் வெண்பட்டென்பதாம். பட்டுக்கே சுபாவம் வெள்ளை நிறம். இவற்றைத்தெளிந்த மேலோர் "சுக்லாம்பரதரம்" என்று எமதப்பனை வந்திக்கப்பினனிடுவரோ? இந்தப்பிரமாணங்களை யாம் காட்டியதனால் ஹயக்ரீவருக்கு வெள்ளைவஸ்திரமில்லையென வாதிடவந்தோமில்லை. எதிரிகள் பிரமாணங் காட்டவில்லையென்று அவரது வாததுர்ப்பலத்தையே காட்டினும். சநியுங்கறுப்பு-சக்கிரியும் (விஷ்ணு) கறுப்பு. அதனால், சநிக்கென்ன விசேடம்? அரியென்பது தவளை. அது விஷ்ணுவுக்கும்பெயர். அதனால், தவளைக்கென்னவிசேடம்? இப்படியே சதுர்ப்புஜத்தினிடத்துங் கொள்க. நிற்க.

ஔவையாரது விநாயகரகவலில், "பொன்னரைஞாணும் பூந்துகிலாடையும்" என்று கூறப்பட்டிருக்கின்றது. துகிலென்றாலும் ஆடையென்றாலும் வஸ்திரத்தையே குறிக்குமாயினும், ஈண்டுத் துகில் என்றது நிறத்தைச் சுட்டியதெனவுணர்க. சீவகசிந்தாமணி-நாமகளிலம்பகம் -"குழவிவெண்மதி" எனும்பாடல் விசேடவுரையில், "துகிற்கொடி" என்றவிடத்தில், துகிலென்பது வெண்மை செம்மை நிறங்களுக்குப் பொதுவென்பது தோன்ற "வெண்டுகில்" என்றும், ஆசிரியர் நச்சினார்க்கினியர் பிரமாணங் காட்டி நிலைபெறுவித்தனர். இதனால் "பூந்துகிலாடையும்" என்று ஔவை கூறியதற்கு வெள்ளைவஸ்திரம் என்று யாம் பொருள் விரிப்பதே உசிதமாம். சிவப்புவஸ்திரமென்றும் பொருளுண்டாதற்கு யாதுகதியெனின், விநாயகருக்குச் சிவப்புவஸ்திரமு மோரவசரத்திற் கேட்கப்படுகையால், அதுவும் ஸாமஞ்சஸமேயாம். இவ்வுண்மை யுணராத விகடநண்பர்"துப்பார்திருமேனி" என்பதற்கு ஒரு வியாக்யானஞ் செய்தாராகையால் அதனையுஞ்சிறிது விசாரித்தொழிப்பாம்

விநாயகரைத் துப்பார்திருமேனிய ரென்று கூறியதனால் அவர்பிரமசாரியென்றும், அவருக்குக் கிருஷ்ணஜின முரித்தென்றும் இவர் கண்டுபிடித்த விதம் எமக்கு விளங்கவில்லை. துப்பார்திருமேனியென்பது பரிசுத்தமான திருமேனி, அல்லது பவளநி

றமான திருமேனியென்று பொருள்படும். இவற்றுள், பவளமேனி யென்பது வெள்ளைமேனியை யொருகால் மறுக்கலாம். வெள்ளைமேனி-பவளமேனி-நீலமேனி முதலியபல திருமேனிகளை யாமொப்பியிருத்தலால் இவர் தேடிய துப்பார்திருமேனி எம்மைப் பாதித்திலதென்க. பிரமசாரிக்கு உபவீதத்தில் மான்றோன் முடிச்சேயன்றி மான்றோல் வஸ்திரமில்லை. எமது கணபதியை இவர் பிரமசாரியென்று வியவஸ்தைப்படக்கூறியது அபராதமாம். அவர் வல்லபையை மணந்தார், சித்திபுத்திகளை மணந்தார் என்று பதிநூல்கள் கூறுவதால் பூர்வபட்சிமதம் நிரஸ்தம். இதனால், பிரமசர்யம், கிரகஸ்தம் முதலிய ஆசிரம நாமங்களைச் சுட்டி அவருக்கு வியவஸ்தை யேற்படுத்துவது நுட்ப விசாரணையில்லாத புத்தியின் குறைவென்றே அறைந்திடுவர் மேலோர். இவர் நிற்க.

இவருக்கு வழிகாட்டிய இராமதாசரின்னுமிரண்டொரு விஷயங்கூறியிருக்கின்றார். அவைகளையும் வருவித்தொழிப்பாம்.

விநாயகருக்கு "சதுர்ப்புஜம்" என்றது கூடாதாம். அவருக்கு ஐந்து புஜமென்று கூறுதலமைதியாம். "ஐந்துகரமு மங்குசபாசமும்" என்று எமதன்னை (ஔவை) கூறினள். தும்பிக்கையைச் சேர்க்காதபோது நான்குகரம் என்பதமையும். இதனை "ஏகதந்தம் சதுர்ஹஸ்தம்" என்று கணபத்யுபநிஷத்து இனிது விளக்கியது. இவ்வுபநிஷத்தைத் தொடர்ந்தே "சதுர்ப்புஜம்" என்றது ஜீவிக்குமாறறிக. தும்பிக்கையைச் சேர்த்து ஐந்து புஜமென்று சொல்ல வேண்டியதாக இவர் தம தமங்கலவார்த்தைகளை யெல்லாங்கோத்து வீண் பிரசங்கத்திலிழிந்தது விவேகிகளுக்கு வெகு துச்சமாம். இவருக்கிருந்தமதி ஔவையாருக்கிருந்தால் "ஐந்துகரமும்" என்றதை ஐந்து புயமும் என்றே சொல்லியிருப்பர். புஜத்தில் கரம் வியாப்பியம். கரத்தில் புஜம் வியாப்பியமன்று. அதனால் புஜத்தைக் கரமென்றிடல் தக்கதும், கரத்தைப் புஜமென்றிடல் தகாததுமாயினதுணர்க. யானையின் றுதிக்கை கரமேயன்றிப் புஜமாகாது. துதிக்கை-தும்பிக்கை என்பவற்றுள், கை கையென்றுவரும் வழக்குகளன்றிப் புயம் என்னும் வழக்கு வந்தவாறில்லையறிக. நமதன்பர் தும்பிக்கையைப் புஜமென்று சாதிக்கவேண்டின், ஆன்றோராட்சிகாட்டி முந்துறக்கடவர். இவ்வாறன்றி அவர் கொட்டுமொபாசங்களை விவேகிகள் காற்கடைகொண் டெற்றுவரென்க. நிற்க.

இவர் கஜமுகாசுரனை வதைக்கும்பொருட்டே கணபதியவதரித்தாரென்கையால், அவரவதரிக்கு முன்னர்ப் பிரணவரூபியாகிய யானைமுகக்கடவுள் யாவரெனவும், கஜமுகாசுரனே பிரணவப் பொருளோவெனவும் வினவித் தமது கண்மூடித்தனத்தைக் காட்டினர். கஜமுகாசுரனை வதைத்தகோலம் கணநாதரது எண்ணிறந்த அவசரங்களிலொன்று, அநாதி நித்தியமாயுள்ளது எமதப்பனுடைய யானைமுகத்திருக்கோலம். இவ்வுண்மை போதரவே "த்வம்ஸச்சிதாநந்தாத்விதீயேஸி" என்று சுருதிகூறி அவரை ஸத்துச்சித்தாநந்த வடிவினரென்று இனிது பிரகாசப்படுத்தியது. ஈண்டு ஸத்தென்றது காலத்திரயத்து முள்ளபொருளாம். இவ்வுள்பொருளாகிய பரசிவகணபதியை "ஏகயேவுசிவோநித்யஸ்-ததோந்யத்ஸகலம் ம்ருஷா" என்று வேதம் விதந்தபடி யறிக. இனிக்கஜமுகாசுரன் பிரணவப்பொருளாவனோ வென்று பரிகசித்த இவரது அறிவை வண்ணானுக்குப் போட்டுத் தொலைக்கலாகாதா? குதிரை மூஞ்சியாகிய இவரது தெய்வத்தைக் காட்டினுமா கஜமுகாசுரன் தாழ்ந்தவன்? குதிரை மூஞ்சியை ஞானப்பிழம் பென்று கொண்ட இவர் கஜமுகாசுரனை நிந்தித்தது கேவலம் அசங்கதமாம். இந்தக் கஜமுகாசுரனிடத்திலும், சூரன்- சிங்கமுகன்- தாரகன் முதலினோரிடத்திலும் விஷ்ணு முதலியோரகப்பட்டுப் பட்டபாடும் கெட்டகேடுஞ் சொல்லமுடியாதே. தாரகன் மார்பில் விஷ்ணுவினதுசக்கரம் பதக்கமாகநின்ற சங்கதி இவருக்குத் தெரியாதுபோலும். இவர்களைச் சங்கரிக்கவே மூத்த பிள்ளையாரும் இளையபிள்ளையாரும் அவதரிப்பார்களானால் இவர்கள் எவ்வளவு பெருமையுடையவர்களாகவேண்டும்? இவர்களில், சர்வோத்தமனாகிய கஜமுகாசுரனைச்சுட்டி (இவன் சந்நிதியிலொரு மசகமாயொதுங்கும் விஷ்ணுவை மதிக்குமிவர்) பரிகசித்தது ஆச்சரியத்தினும் ஆச்சரியமாம். விரிக்கிற் பெருகும்.

இன்னுமிவர் ஒரு சம்பந்தமுமின்றி ஸ்ரீமத்-அப்பைய தீக்ஷித ஸ்வாமிகளை "அப்பைய தீக்ஷிதரைப்போல விபரீதத்தினுழையாமல்" என்றுதூஷித்தார். ஏனோ இவருக்கிந்த விபரீதம்? நெல்லாலடித்தாற் கல்லாலடிப்பார்களென்று தெரியாதா? இவர் தூஷித்தமையால், யாம் அவரைப்பூஷிக்கின்றோம். "விஷ்ணுச்சாம் சீத்தம் சோஹஸ்வதந முகாச்சேதரே யஸ்யசிஷ்யாச் - சிங்முத்ரோத் புல்லபாணேஸ்ஸித பஸிததநோஸ்ஸத்குரோச் சந்த்ரமௌளேः அம்சோதுஷ்பாஞ்சராத்ரப்ரபலகுருசிரோங் யஸ்தவாமாங்க்ரிபத்ம, — ச்ரீமாநப்பய்யய

ஜ்வாஜயதிகலுதராம் ஸத்குரும் தந்நமாமி" என்பது ஸ்ரீதீக்ஷிதஸ்வாமிகளுடைய ஸ்தோத்ரம். இதன் பொருளைக் கீர்வாணபண்டிதர் வாய்க்கேட்டுத் தெளிந்து அடங்குவாராக. நிற்க.

இவர் "ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீஹயக்ரீவமூர்த்தியாய்த் தோன்றித்தன துந்திக்கமலத்தின் கண்ணுதித்த பிரமதேவர்க்கு வேதங்களையுபதேசித்தாரென்று சுருதி கூறுகையால், அக்காலவரைப்பற்றிய சுலோகமிது" என்று முடிவுரைகூறி விஸ்ராந்தியடைந்தார். ஹயக்ரீவர் பிரமனுக் குபதேசித்திருக்கலாம். அந்த ஹயக்ரீவவிஷ்ணுவுக்குச் சொந்தஞானமேது? சிவபரஞ்சுடரினிடம் விஷ்ணுவுக்குபதேசமாகையால், அந்தவுபதேசத்தையே பின்னர்த்தான் பிரமனுக்குப் பிரஸாதித்திருக்கலாம். அதனுல், விஷ்ணுவுக்குண்டாகிய ஞானாதிக்யம் யாது? "ஈசாநஸ் ஸர்வவித்யாநாம்-ஸஏவாதிகுருச்சிவ:—தஸ்யசிஷ்யோமஹாவிஷ்ணுஸ்-ஸந்தஜ்ஞாநமஹோததி:" என்னும் ஆதித்ய புராணவசனத்தால், ஸர்வவித்யா ஸ்வரூபராகிய ஈசானமூர்த்தி ஆதிகுருவெனவும், அவருடைய சிஷ்யர் விஷ்ணுவெனவும் பெறப்பட்டமையால், விஷ்ணுவுக்கு ஸ்வதந்திர ஞானமில்லையென்று வெளிப்பட்டது. சுருதி "ஈசானஸ் ஸர்வவித்யாநாம்" என்று கூறுகின்றது. அன்றியும் அது "சிந்மாதரோஹம் ஸதாசிவ:" என்று சிவனர் கூறியதாக வெளிப்படுத்தியது. இவ்வுண்மைபோதர மீண்டும் ஆதித்யபுராணம் "வாசக: ப்ரணவோயஸ்ய: ஜ்ஞாநமூர்த்தேருமாபதி:" என்று பிரகாசப்படுத்தியது. இவ்வாறு சுருதி ஸித்தமான சுவதந்திர ஞாறுதிக்யம் விஷ்ணுவுக்கு யாண்டுங் கேட்கப்படாமையால் அளவுக்கதிகமாக ஹயக்ரீவரை நமதன்பர்புகழ்ந்தது நிஷ்பலமாயின தறிக. விஷ்ணுமூர்த்தி கபிலராகவந்தபோது புராரியாகிய சிவனிடத்தில் சாங்கிய ஞானேபதேசம்பெற்றனர். பதரிகாசிரமத்தில் நாராயணருக்குச் சிவன்வெளிப்பட்டு ஈசுவரகீதை யுபதேசித்தருளினர். பஞ்சவடிதீரத்தில் அகஸ்தியரிடம் விரஜாதீக்ஷையடைந்த ஸ்ரீராமபத்ரருக்குச் சிவன் வெளிப்பட்டுச் சிவகீதையுபதேசித்தருளினர். சரஸ்வதிக்கும் விஷ்ணுவுக்கும் முன்னும் பின்னும் ஞானவைபவத்தையும், பிருஹஸ்பதி பகவானுக்கு முக்திவைபவத்தையும், பிரஹ்மதேவருக்குப் பிரமகீதையையுஞ் சிவபெருமான் பிரஸாதித்தருளினர். உபமன்யுபகவானிடம் திருவடிதீக்ஷையும், ஞானேபதேசமுமடைந்த கண்ணன் தானடைந்த ஞானத்தையே அர்ஜுனனுக்குப் பின்னருபதேசித்தனர். இவற்றல் விஷ்ணுவுக்குச் சொந்தஞான மில்லையெ

ன்பது ஸ்திரமாயிற்று. இத்தகைய விஷ்ணுவானவர் பிரஹ்மாவுக்குச் சுதந்தரமா யுபதேசிக்கும் யோக்யதை பெற்றிருந்தாரென்று பூர்வபட்சி கூறியது வெறும் பொய்யாம். "யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்" என்னுஞ்சுருதி அஷ்டாதச வித்தைகளையும் புராணங்களையும் தமக்கு அக்ரகுமாரராகிய பிரஹ்மதேவருக்குப் பரமசிவம் கொடுத்தருளினரென்று தெரிவிக்கின்றது. "அஸ்ருஜத்ஸர்வ சாஸ்த்ராணி- மஹாதேவோ மஹேச்வரஃ" என்று தொடங்கிச் சர்வசாஸ்திரங்களையும் சிவபரஞ்சுடரே யுண்டாக்கினரென்று பாரதங் கூறுகின்றது. அன்றியும், "அஷ்டாதசாநாம் வித்யாநாம் ஏதாஸாம் பிந்நவர்த்தனம்-ஆதிகர்த்தா கவிஸ்ஸாக்ஷாச்-சூலபாணிர்மஹேச்வரஃ" என்னும் வாக்கியம் அஷ்டாதச வித்தைக்குங் கர்த்தா சூலபாணியாகிய சிவபெருமானேயென்று போதிக்கின்றது. இவற்றைத் தெளிந்தாரவைக் கண்ணே நந்தாசர் ஹயக்ரீவருக்குத் தேடிவைத்த சர்வசாஸ்த்ர வக்த்ருத்வம் ஜீவியாதிறந்ததறிக. விஷ்ணுமூர்த்தி பிரமனை யுண்டுபண்ணினரென்னும் பாட்டிக்கதையை மேலே வெளுக்கப் பார்த்திருக்கின்றேமாகையால் மீண்டும் அதனை யிங்குத்தொட்டுக் காலம்போக்க விசைந்திலமென்க. இவ்வாறிவரது பிரசங்க மொதுங்கினமையால் இவர் "சுக்லாம்பரதர" சுலோகத்துக்குத் தேடியகதி துர்க்கதியாய் முடிந்ததறிக. இனி அந்தச்சுலோகம் எக்காலத்தது, எந்த ஸந்தர்ப்பத்திலுண்டானது என்பதைச் சிறிது விளக்கி யுபசாந்தியடைவாம்.

உலகில் பரதகண்டவாசிகளனைவரும் பூர்வாபர சம்பந்தமான எந்தக்கருமங்களைச் செய்யப்புகுமிடத்தும், தொடங்கும்போது "சுக்லாம்பரதரம்" என்று தலையில் குட்டிக்கொள்வார்கள். தலையிற்குட்டிக்கொள்வது விக்னேசுவரரைக் குறித்தேயன்றி வேறுதேவர்களைக் குறித்தன்று. புரோகிதர்கள் வாயிலாக அதனை நாமறிவதன்றி நாம்பாலியர்களாய்த் தெலுங்குபாஷையைப் பள்ளிக்கூடத்தில் அப்யசித்துவருங்காலையில், நமக்கு உபாத்தியாயர் படிப்பிக்கும் பாலராமாயணமென்னுஞ் சிறுநூற்பயிற்சியானு மறிந்து மகிழ்கின்றேம். அந்தப்பாலராமாயணம் உரையோடு "டீகாபாலராமாயணம்" என்னும்பெயரால் வெளியிடப்பட்டிருக்கின்றது. அதில், "ப்ரஸந்நவதநம்=ப்ரஸந்நமைந முகமுகலவாடனகு விக்னேஸ்வருனி, ஸர்வ=ஸமஸ்தமைன, விக்ன=கார்யஹாநுலயொக்க, உபசாந்தயே=போவுடகொரகு, த்யாயேத்=த்யாநமு சேயவலெனு" என்று உரையெழுதப்பட்டிருக்கின்றது. இது ஸநாதனமானவழக்கு. இந்த

வழக்கினைவான்மீகிபகவானுங்கையாண்டனர். இதிலகூயைகொண்ட தாசர்போன்ற எரிமூஞ்சிகள் சிலர் பின்னர் ஷை பாலராமாயணத் தில், விஷ்வக்ஸேநாஷ்டகம் என்று தொடங்கி "தசாஹம் திவ்யஸூ ரீணும் - சடகோபாதியோகிநாம்" என்று அவைதிகநாமங்களையெல் லாஞ்சேர்த்து, பாலராமாயணத்தைக் கூளராமாயணமாக்கிவிட்டார் கள். எந்தச்சுபாசுபங்களிலும் பிராம்ஹணன் மஞ்சள்பிள்ளையாரை ப்பிடித்துவைத்த மாத்திரத்தில் "சுக்லாம்பரதரம்" என்னுஞ்சுலோ கத்தையே சொல்லிப்பூசிப்பதை ஆபாலவிருத்தரீரு யுள்ளவர்களில் அறியாதார்யாரே? இதுகாறும் யாமெழுதிய நியாயங்களால் எதிரி கட்சிகளொவ்வொன்று மிற்று நிர்மூலமாயிடச்செய்தோம். எமதப் பன் கஜவக்த்ரனுக்கே அந்தச்சுலோக முரித்தென்பதை "சுக்லாம் பரதரம்-விஷ்ணும்-சசிவர்ணம்-சதுர்ப்புஜம்-ப்ரசந்நவதனம் - ஸர்வ விக்னோபசாந்தயே" என்று பிரித்துப் பொருள்கூறி நிருபணஞ்செ ய்தோமாகையால், இதனிடையில் ஏஞ்சிநின்ற "த்யாயேத்" என்ற பகுதியையும் ஈண்டு விசாரித்து விஸ்ராந்தியடைவாம்.

"த்யாயேத்" என்பது தியானமார்க்கத்தாலுபாசிக்கத்தக்க வஸ் துவையே குறிக்கும். விஷ்ணுவை அதற்கிலக்காக்கமுடியாது. நாரா யணரைப் பிரதிபாதிக்கவெழுந்த நாராயணோபநிஷத்தில், அந்த நா ராயணரை "நாராயணபரோத்யாதா" என்று கூறியிருக்கின்றது. "த்யாதா" தியானிக்கின்றவர் என்று வெளிப்படுவர். இவர் தியானிக் கப் படுவராகவேண்டின், "த்யேய:" என்று இவரை வேதங்கூறவே ண்டும். அப்படியாண்டும் வேதம் இவரைக்கூறியதின்று. "த்யேயர்" சிவனென்று பலசுருதிகள் கூறுகின்றன. அவை,

"காரணந்துத்யேயச்சம்பு."
"சிவஏகோத்யேய:"
"த்யாயீதேசாநம்"
"ஸஏகோருத்ரோத்யேய:"

என்பனவாதியாம். அன்றியுமிச்சிவபரஞ்சுடரை "ப்ரஹ்ம விஷ்ண் வாதிபிஸ்ஸேவ்யம்" என்று வேதம் வந்திக்கின்றது. இந்தச்சுருதிக ளால் சேவ்யராகாத (த்யேயராகாத) விஷ்ணுவை (சேவகரை) எப் படியோ "த்யாயேத்" என்பதற்குரிய பொருளாக வைதிகர்களொப்பு வார்கள்? எமது கஜாநநர் தியேயராகிய சிவனரது அபேதாவதாரமா கையாலும், அவரையே சுட்டி வேதமானது "த்வாம்யோகிநோத்யா

ந்திநித்யம்'' என்றும், "ஏவம்த்யாயதியோநித்யம்'' என்றும் கோஷிக்கின்றமையாலும், "த்யாயேத்'' என்பதும் பிரயோஜனத்தையடைந்து ஸாதுக்களை ஸ்ரீவிநாயகக்கடவுளது திருவடிக்கமலத்தியானத்திற் செலுத்திப் பேரானந்த முறச்செய்யும். முழுமுதற் பொருளாகிய ஸ்ரீ விநாயகக் கடவுளுடைய பிரபாவம் "இன்னும் பலகோடியில்லையோ யாமிருந்து, சொன்னபொழுதே தொலையுமோ'' என்று சிவாநுபூதிச் செல்வர்களாகிய இரட்டையர்கள் கூறியபடி அனந்தமாயுள்ளதால் அது நஞ்சொல்லளவிலடங்குந்தரத்ததோ? ஆசையால் நாமவருடைய அரும்புகழை யெடுத்தோதுவதெல்லாம் ஊசிக்கண்ணால் ஆகாயம் பார்ப்பதையே யொக்கும். திருவாடுதுறையாதீனத்துக் கச்சியப்பத்தம்பிரான்சுவாமிகள் கூறியுள்ள பார்க்கவ புராணக் காப்புச்செய்யுளை ஈண்டு வரைந்து அதன்கண் பொதிந்துள்ள விநாயகப்பெருமானுடைய மஹிமாதிசயங்களை நமக்கெட்டிய மட்டில் இன்னும் சிறிது விரித்தோதுவாம்.

"அகரமென வறிவாகி யுலகமெங்கு
மமர்ந்தகர வுகரமக ரங்கடம்மாற்
பகருமொரு முதலாகி வேறுமாகிப்
பலவேறு திருமேனி தரித்துக்கொண்டு
புகரில்பொரு ளுண்கினையு மிடர்தீர்ந்தெய்தப்
போற்றுநருக் கறக்கருணை புரிந்தல்லார்க்கு
நிகரின்மறக் கருணைபுரிந் தாண்டுகொள்ளு
நிருமலனைக் கணபதியை நினைந்துவாழ்வாம்.''

இத்தெய்வ வணக்கத்துள், தெய்வமாகிய விநாயகரை "அகரமெனவறிவாகி யுலகமெங்கு மமர்ந்து'' எனக் கூறினமையா லதனுண்மையை விசாரிப்பாம். ஈண்டு அறிவாகி யென்றதே விநாயகரிடஞ் சேர்ந்தது இவ்வறிவாந் தன்மைக்கு அகரம் உபமானமாயிற்று. உபமானஸ்தானத்தினின்ற அகரம் எழுத்துகளுக்கு முதலாகி அவைகளை யியக்குதல்போல அறிவாகிய விநாயகர் உலகத்துக்கு முதலாகி, அதனையியக்குமாறறிக. அகரம் எழுத்துக்களை யியக்கு முண்மையை "அகர முதல வெழுத்தெல்லாம்'' என்று குறளாசிரியர் கூறியருளினர் - அவரே "ஆதிபகவன் முதற்றே யுலகு''என உபமேயஸ்தானத்தினின்ற அறிவு அல்லது விநாயகர் என்னும் ஆதிபகவன் உலகத்தை யியக்குதலையும், விதந்தருளினர். இக்காப்புச்செய்யுளில் "உலகமெங்கு மமர்ந்து'' என விரித்தமையே அறிவாகிய விநாயகர் உலகத்தை யியக்குதற்கு ஆதரவாகியது. இன்னுமிவ்வுண்மையை "அகரவுயிர்போ லறிவாகி யெங்கு

நிகரிலிறை நிற்குநிறைந்து" என்னுந் திருவருட் பயனுனுந் தெளியலா மென்க. இத்திருவருட்பயன் குறளாசிரியராகிய வள்ளுவனார்கூறிய அறம் - பொருள் - இன்பம் என்னு முப்பாலுக்கப்பாலதாகிய வீட்டையே விளக்க வந்ததென்க. இதனை யாக்கியோர் சந்தான குரவருளொருவராகிய உமாபதிசிவமென்றறிக. இவரது திருவாக்கிற்போந்த "அறிவாகி" என்றதனையே யிவ்வணக்கச்செய்யுளில் "அறிவாகி" எனவருளிச்செய்தவாறறிக.

இனி அகரம் எழுத்துக்களை யியக்குமாறும், அறிவாகிய முதற்கடவுள் உலகத்தையியக்குமாறு மினிதுபோதர வீண்டு விரிப்பாம். எழுத்துக்கள் உயிரும், மெய்யுமென விருவகைய்டாம். இவற்றுள், உயிர்கள் தாமே யொலிப்பனவும், மெய்கள் உயிர்களொலிப்பித்தாலொலிப்பனவுமாம். உயிர்க ளகரத்தின் பேதமாகையா லவை யத்தனையும் அகரமேயாம். எழுத்துக்களை யியக்குவது அகரமொன்றேயென வெல்லாநூல்களுங் கூறுதலா லேனையுயிர்களை யவ்வகரத்தின் பேதமென யாம்கூறியது ஸாமஞ்சஸமாயின வாறறிக. அதனால், அகரம் எழுத்துக்களை யியக்குகின்றதெனல் மெய்யெழுத்துக்களையேயென்றறியவேண்டியது. மெய்யெழுத்துக்க ளரைமாத்திரையுடையன. ஒலிக்கு மாற்றலாகிய வரைமாத்திரையோடு கூடியிருப்பினும் அவை யொலிப்பிக்குமாற்றலினதாகிய வொருமாத்திரையோடு கூடிய அகர முபகரிப்பினல்லது தாமே யொலியாவென்க. ஒலிக்குமாற்றலினவாகிய மெய்யெழுத்துக்கள அரைமாத்திரையும் ஒலிப்பிக்குமாற்றலினதாகிய அகரம் ஒருமாத்திரையு முடைமையா லிரண்டுங் கூடியவழி யொன்றரை மாத்திரையாக வுச்சரிப்புண்டாயிடுதலில்லை. ஒரு மாத்திரையாக வுச்சரிப்பெழலேயமையும். ஓரேமாத்திரையாக வுச்சரிக்கப்படுவதால் ஒலிக்குமெழுத்தினையும், ஒலிப்பிக்குமெழுத்தினையு மோரினமென்றல் கூடாது. இரண்டும் விஜாதிகளே. ஒலிக்குஞ்சாதி யொன்றும், ஒலிப்பிக்குஞ்சாதி மற்றொன்றுமாம். இந்த விசாரத்தால், "அகர முதல வெழுத்தெல்லாம்- அகரவுயிர்போல்- அகரமென" என்னும் பிரயோகங்கள் பயன்பட்டவாறறிக. அன்றி, எடுத்துக்கொண்டவுபமானம் இனிது விளக்கப்பட்டவாறுமறிக. இது நிற்க.

அறிவாகிய முதற்கடவுள் உலகத்தை யியக்கும் விதத்தையுங் கொஞ்சம் யோசிப்பாம். உலகம் என்பது சேதனம், அசேதனம் என விருவகைத்து. சேதனம் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலாகலர் என்னு மூவித வுயிர்வர்க்கங்கள். அசேதனம் மலமாயா கர்மங்க

